# பார்வையைக் குறைப்படுத்தும் க்ளகோமா!



**இந்திய மக்கள் தொகையில் இரண்டு சதவிகிதம் பேருக்கு – அதாவது சுமார் ஒன்றரைக் கோடி மக்களுக்கு 'க்ளகோமா' என்கிற கண்நோய் இருக்கிறதாம்! இது என்ன க்ளகோமா?**

"இரத்த அழுத்தம் மாதிரி விழிநீர் அழுத்தம் என்றும் உண்டு. அதற்குப் பெயர்தான் க்ளகோமா!" என்று விளக்க ஆரம்பித்தார் டாக்டர் சிதாலட்சுமி; சங்கர நேத்ராலயாவைச்

"எங்கே, உங்க பிரெண்ட், ஊெம்பிட்டாரா?"

"ஓ! நான், உன்கிட்டே 'காப்பி' கொண்டுவான்னு சொன்னேன் பாரு.... அப்ப எடுத்தான், ஓட்டம்....!"

— ஆர். வசந்தகுமார்



"போன மாதம் சாலை விபத்து குறைவா இருக்கிறது ஆச்சரியம்தான்."

"போன மாதம் ஒருவாரம் லாரி ஸ்டிரைக் நடந்ததை மறந்துட்டிங்களா?"

— தஞ்சாவூர் ராஜபாரதி

சேர்ந்த கண் மருத்துவர்.

"இதிலும் இரண்டு வகைகள் உண்டு! ஒன்று, கண்ணில் வலி அதிகமாக இருக்கும். சிவந்து போகும். பார்வைக் குறைவு ஏற்படும். ரத்த அழுத்தம் பார்ப்பது மாதிரி, கண்ணில் நீர் அழுத்தம் எவ்வளவு இருக்கிறது என்று கண்டறியும் கருவி மூலம், நோயாளியின் கண்ணில் நீர் அழுத்தம் எவ்வளவு இருக்கிறது என்று பரிசோதிப்போம். கருவியில் மெர்க்குரி அளவை 18 முதல் 21 எம்.எம். வரை காண்பித்தால் நார்மல்தான். அதற்கு மேல் இருந்தால் உடனடியாகச் சிகிச்சையைத் தொடங்குகிறோம்."

"இன்னொரு வகை என்ன?"

"இன்னொன்று மிகத் தீவிரமான - அக்யூட் க்ளகோமா. நோயாளி தமக்கு இந்த நோய் வந்திருப்பதை அறியவே முடியாது. அதாவது அவரது பார்வையின் பரப்பளவு குறைந்து, மெல்ல மெல்லப் பார்வை இழக்க ஆரம்பிக்கும் போதுதான் நோயை உணர்வார். இதை சைலண்ட் க்ளகோமா என்பார்கள்!"

இரண்டாவது வகை க்ளகோமா நோயாளிகள்தாம் அதிகம். அதிலும் குறிப்பாக 35-40 வயதுக்கு மேற்பட்டவர்களைத்தான் இது அதிகம் பாதிக்கிறது. ஆனால் நோயாளி சிகிச்சையைத் தாமதிக்கும் போது அல்லது அலட்சியமாய் இருக்கும் போது, ஆப்டிக் நெர்வ் எனப்படும் விழி நரம்பு பழுதடைந்து, பார்வை போகத் தொடங்கி விடுமாம்.

"இதற்கு வெளிப்படையான அறிகுறிகள் எதுவும் இருக்காதா?"

"இருக்காது!"

"ஐயோ, அப்படியானால் இது வந்திருக்கிறதா இல்லையா என்று எப்படி தெரிந்து கொள்ளுவது?"

"முப்பத்தைந்து வயதுக்கு மேல் கட்டாயமாகக் கண்களைப் பரிசோதித்துக் கொள்ளுவது நல்லது. ஏனென்றால் முற்றிய நிலையில் பார்வைப் பழுதைச் சீராக்குவது மிகவும் கடினம்.

"குடும்பத்தில் யாருக்காவது க்ளகோமா இருந்திருந்தாலோ, உறவினர்களில் யாருக்காவது க்ளகோமா இருந்திருந்தாலோ, கட்டாயமாகக் கண் பரிசோதனை செய்வது அவசியம்!" என்றார் டாக்டர் சீதாலட்சுமி.

இன்னொரு வகை க்ளகோமாவும் உண்டாம் : பிறவியிலேயே ஏற்படும் க்ளகோமா - அதாவது கன்ஜனிடல் க்ளகோமா. பிறந்த குழந்தையின் விழிக்கோளம், அளவுக்கு மீறிப் பெரிதாய் இருக்கும். விழிக்கோளம் பெரிதாக இருக்கிறது, அவ்வளவுதானே - என்று அலட்சியமாய் இருக்கக் கூடாது. ஏனென்றால் பச்சிளம் குழந்தைக்குப் பார்வை இல்லை என்பதை அதுவாகவே வெளிப்படுத்த முடியாது இல்லையா? உடனடியாகக் கண் மருத்துவரிடம் காண்பித்து, அறுவைச் சிகிச்சை மூலம் க்ளகோமாவை நீக்கி விடலாம். குழந்தைக்குப் பார்வை கிடைக்கும்.

"சரி, கண்ணில் எதற்கு நீர் இருக்க வேண்டும்?"

"அது நீர் என்று சொல்ல முடியாது. அக்வியஸ் எனப்படும் திரவம். அது இருந்தால் தான், விழியிலுள்ள லென்ஸ், ஐரிஸ், கார்னியா போன்ற பகுதிகளுக்கு ஊட்டம் கிடைக்கும்."

தகுந்த மருந்துகளும், ஒழுங்கான சிகிச்சை முறைகளும் இருக்கின்றன என்பதால், க்ளகோமா என்று தெரிந்தவுடன் அலட்சியத்தை ஒதுக்கி விட்டு, கண் மருத்துவர் சொன்னபடி கேட்டு விடுவது நல்லது!

— சாருகேசி

**நவராத்திரி கொலு என்பது நம் ஊரில் மட்டும்தான் என்பதில்லை; ஜப்பானிலும் நடக்கிறது.. பெயரில்தான் வித்தியாசம்.**

ஒவ்வோர் ஆண்டும் மார்ச் மூன்று, மே ஐந்து ஆகிய தேதிகளில் ஜப்பானிலும் கொலு வைத்து, விருந்து சாப்பிடுகிறார்கள்.

மார்ச் மூன்றாம் தேதி நடப்பது முழுக்க முழுக்கப் பெண்களுக்கான விழா. மேல் தட்டில் ராஜா-ராணி பொம்மைகளை வைத்து, கீழ்த்தட்டுகளில் அரசவைக் கலைஞர்கள், பணியாளர்கள் போன்ற பொம்மைகளை வைத்து கொலு மாதிரி அமைத்துக் கொண்டாடுகிறார்கள்.

மே ஐந்தாம் தேதியன்று கொண்டாடப்படுவது இளைஞர்களுக்கான விழா. அப்போது போர்க் கருவிகளைத் தாங்கிய 'முஷா நிங்யோ' என்று சொல்லப்படும் கம்பீரமான போர் வீரர்களின் பொம்மைகளை வைத்துக் கொண்டாடுகிறார்கள்.

ஒரு ஜப்பானியக் குடும்பத்தில் ஒரு பெண் குழந்தை பிறந்தவுடனேயே 'தைரி-சாமா' என்று அழைக்கப்படும் ராஜா-ராணி பொம்மைகளுடன் மேலும் பதினைந்து பொம்மைகளை அந்தப் பெண் குழந்தைக்காகச் சேகரிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். இந்த பொம்மைகள் பெண்களின் தாய் வீட்டுச் சீதனமாகக் கருதப்படுகிறது. திருமணமாகிச் செல்லும் பெண்களோடு இந்தப் பொம்மைகளுடன் கூடவே போகும். தலைமுறை தலைமுறையாகப் பாதுகாக்கப்படும்.

• கண்காட்சியை ரசிக்கும் மியோ டாகயாமா....



அண்மையில் ஜப்பானியத் தூதரகம் சென்னையில் பொம்மைக் கண்காட்சியொன்றை நடத்தியது. காட்சியில் வைக்கப்பட்டிருந்த ஒவ்வொரு பொம்மையும் ஒவ்வொரு கதையைப் பின்னணியாகக் கொண்டிருந்தது.

# ஜப்பானியர்கள் வைக்கும் கொலு!

கையில் பூக் கூடையை வைத்துக் கொண்டு ஒயிலாக நிற்கும் பெண் பொம்மை, இறந்து போன தன் காதலனோடு மறு உலகத்தில் ஒன்று சேரக் காத்திருக்கும் காதலியின் உருவகம். ஒருவர் முதுகை ஒருவர் பிடித்துக் கொண்டு வரிசையாக நிற்கும் உப்பல் கன்னக் குழந்தைகள் எதை



நினைவூட்டுகிறார்கள்? பிரபலமான ஜப்பானிய விளையாட்டான 'கோடோ ரோ' வைத்தான் விளக்குகிறார்கள்.

இது மாதிரியான பொம்மைகள் ஜப்பானிய கலாசாரத்தை வெளிப்படுத்துகின்றன என்றால், மற்ற சில பொம்மைகள் சில சரித்திர உண்மைகளை வெளிக் காட்டுவனவாக இருக்கின்றன.

கை, கால்கள் எதுவுமின்றி, தூண் போன்ற உடலின் மீது உருண்டை முகம் கொண்டு வடிவமைக்கப்பட்டிருக்கும் 'கோகேஷி' பொம்மைகளின் பின்னணியில் கனமான சோகம் இழையோடுகிறது.

ஒரு சமயம் ஜப்பானில் கடும் பஞ்சம் தலைவிரித்தாடிய போது, குழந்தைகளைக் காப்பாற்ற முடியாத நிலை. அப்போது இறந்த குழந்தைகளின் நினைவாக இதுபோன்ற பொம்மைகளைச் செய்து,

குடும்பங்களில் வைத்திருந்தார்களாம்! இப்போது நிலைமை மாறியிருந்தாலும், பழைய சோக சம்பவத்தை நினைவு கூரும் வகையில் வடிவமைப்பை மாற்றாமல் அப்படியே பொம்மைகளைச் செய்கிறார்கள்.

கையில் 'பீவா' என்னும் வாத்தியத்துடன் வெள்ளை உடையில் அமர்ந்திருக்கும் பெண் பொம்மையைப் பார்க்கும் போது, நம் ஊர் மீராதான் நினைவுக்கு வருகிறாள்.

இந்த பொம்மை கலாசாரம் ஜப்பானில் எப்படி ஏற்பட்டது? பல்வேறு ரூபங்களில் வந்திருந்தாலும் ஒன்றை மிக முக்கியமானதாகச் சொல்கிறார்கள்.

எட்டாம் நூற்றாண்டில் அரசாண்ட மன்னர்கள் நடத்திய 'புனித விழா' வில், ஒரு சடங்கு நடத்தப்பட்டது. அதில், பொம்மைகள் செய்து அந்தப் பொம்மைகளின் மேல் தங்களுடைய பாவங்களை ஆன்மீகவாதிகளின் துணை கொண்டு ஏற்றி, அவற்றை ஆற்றிலோ அல்லது கடலிலோ எறிந்து வந்தார்கள். அப்படி எறியும் போது தங்களுடைய பாவங்களும் தவறுகளும் நீங்கிப் போய் புனிதமடைந்ததாக நம்பினார்கள். இந்த விழாவை ஒவ்வோர் ஆண்டின் மூன்றாவது மாதத்திலும் செய்தார்கள்.

இப்போதும் ஜப்பானியர்கள் தங்கள் கிராமத்து எல்லைகளிலும் வயல் வெளிகளிலும் தீய சக்திகளை விரட்டுவதற்காக - நாம் திருஷ்டி பொம்மைகள் வைப்பது போல் - பொம்மைகள் வைக்கும் வழக்கத்தைக் கையாண்டு வருகிறார்களாம்!

ஆக மொத்தம் கிழக்காசிய நாடுகளிலுள்ள நம்பிக்கைகள் எல்லாமே ஏறத்தாழ ஒற்றுமையுடையவையாகவே இருக்கிறது என்பதையும் பொம்மைகள் வெறும் விளையாட்டுப் பொருள்கள் மட்டுமல்ல; பொருள் பொதிந்த கதைகள் கூறும் கலை-கலாசாரத்தின் வெளிப்பாடும் கூட என்பதையும் எடுத்துக் காட்டியது கண்காட்சி.

**— நிர்மலா சக்கரவர்த்தி**

வண்ணப்படங்கள் : **யோகா**

---



# இவர் செய்யும் ஆராய்ச்சி!

● இந்தியாவின் முன்னாள் ராணுவ தளபதி சுந்தர்ஜி டாக்டர் பட்டத்திற்காக சென்னை பல்கலைக் கழகத்தில் பதிவு செய்து, கடந்த நான்கு வருடங்களாக ஆராய்ச்சி செய்து வருகிறார். இவர் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டிருக்கும் விஷயம் : Nuclear deterrence doctrine for India. இவர் பிஎச்.டி பெற்றால் இவரே டாக்டரேட் பெறும் முதல் இந்திய ராணுவத் தலைவராக இருப்பார்.

ஆதாரம் : **சண்டே**

● வாரத்தில் எந்த நாட்களில் குளிர் அதிகமாக இருக்கும்? எந்த நாளில் வெப்பம் அதிகமாக இருக்கும்? சனி, ஞாயிறு இருதினங்களில் அதிக குளிராகவும், புதன் கிழமை அதிக வெப்பமாகவும் இருக்கும். இதற்கு என்ன காரணம்? ஆஸ்திரேலியாவில் அடிலெய்ட் நகரிலுள்ள வாயுமண்டல மற்றும் கடல் ஆராய்ச்சி நிறுவனத்தின் விஞ்ஞானி ஆண்ட்ரியன் கார்பர்ன் 1979-1992 வரை செயற்கைக் கோள் மூலம் பெற்ற தகவல்களை வைத்து ஆராய்ந்து பார்த்தார். அதன்படி, வாரத்தின் நடுப்பகுதியான புதன்கிழமையில் போக்குவரத்து வாகனங்கள் சாலையில் மிக அதிகம் ஓடுகின்றன. இதனால் அவை வெளிவிடும் புகை, இயந்திரங்கள் வெளியேற்றும் உஷ்ணம் ஆகியவற்றால் வாயு மண்டல வெப்பநிலை அதிகரிக்கிறதாம். அதனால் புதன் கிழமைகளில் வெப்பம் அதிகம் இருப்பதை உணரலாம். அலுவலக வார இறுதி நாட்களான சனி, ஞாயிறு ஆகிய நாட்களில் சாலைப் போக்குவரத்து குறைந்து தொழிற்சாலை வேலைகளும் பொதுவாக இல்லாமல் இருக்கும். எனவே காற்று மண்டலம் வெப்பம் குறைந்து காணப்படும்! பூமியின் வடபகுதியிலேயே இந்த வெப்ப மாற்றம் அதிகம் உணரப்படுகிறது.

ஆதாரம் : **யுனெஸ்கோ கூரியர்**

தகவல்கள் : **எஸ். ஆலன்**

# இன்றைய சிறுமி



## நாளை . . . . ?



சிறுமியவள் தேவையும் சிறிது.



பெரிய பெண்ணாகி பவனி வருங்கால்,
அவள் தேவைகளும் பெருகி
விட்டதோ ?



உங்கள் சிறார்களின் சிறந்த



எதிர்காலத்திற்கு **சியுபி யின்** "வாமன
விஸ்வரூப திட்டம்"
மற்றும் "**V.I.P. திட்டம்**"



மேலும் விவரங்களுக்கு எங்கள் வங்கியை அணுகவும்




**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

(அந்நியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி)

பதிவு அலுவலகம் : கும்பகோணம் 612 001.

MCS/CUB/1370/95

---

**CUB யின் இதர சேமிப்புத் திட்டங்கள் :**

● சேமிப்புக் கணக்கு ● மாதாந்திர சேமிப்புத் திட்டம் ● நிரந்திர வைப்புத் தொகை
● ரொக்கப் பத்திரங்கள் ● ஸ்ரீ சக்ரா திட்டம் ● CUB ஸ்டாக்இன்வெஸ்ட்
● NRI சேமிப்புத் திட்டம்

---

**CUB - உங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டும் வங்கி !**

# மதுரை துணுக்கு :

மதுரையிலுள்ள ஓர் உணவகத்தின் பெயர் 'மாமியா ஹோட்டல்'. எத்தனையோ நாகரிகப் பெயர்கள் இருக்கும் போது இப்படியொரு பெயரா? அதன் உரிமையாளரிடமே கேட்டேன். "நான் ஒரு காலத்தில் மிகவும் கஷ்டப்பட்டேன். அப்போது என் மாமியார் என்னையொரு சிறிய ஹோட்டல் வைத்து நடத்தச் சொல்லிக் கொஞ்சம் பணமும் கொடுத்து உதவினார். அப்படி ஆரம்பித்ததுதான் இன்று பெரிய அளவில் வளர்ந்திருக்கிறது. இதற்கெல்லாம் என் மாமியார்தான் காரணம். அதனால்தான் 'மாமியா' என்று வைத்துள்ளேன்!" என்றார்.

*— ஜி. செல்வத்துரை, மதுரை — 2.*

## மீனாட்சி - பெயர்க் காரணம் தெரியுமா?

மதுரை மீனாட்சியம்மனுக்கு மீனாட்சி, அங்கயற்கண்ணி என்கிற பெயர்கள் எப்படி ஏற்பட்டன? மீன் போன்ற கண்களை உடையவள் என்பதால்! மீன் போன்ற கண்கள் என்றால் உருவத்திலா? உருவத்தில் என்பது மேலோட்டமான பொருள். உட்பொருள் என்ன தெரியுமா? தாய் மீனின் பார்வை பட்டாலே மீன் குஞ்சுகளின் பசி ஆறி விடுமாம். அது போல் தன் பார்வையாலேயே பக்தர்களுக்கு அருள்பாலித்து மனம் நிறைவடையச் செய்பவள் மீனாட்சி.

*— திருமதி மீனாட்சி பட்டாபிராமன், மதுரை — 3.*

## முக்கனியின் சுவை!

மாமியார் பெற்ற மரியாதை!

என்று அழைக்கப்படும் சுருளி அருவி கம்பம் பள்ளத்தாக்கு அருகே உள்ளது. மினி குற்றாலம். பசுமையான மரங்கள், சலசலத்து ஓடும் நீரோடைகள், கோவில்கள் என்று சூழ்ந்திருக்கும் அருவி. ஐயப்ப பக்தர்கள் இவ்வருவியில் நீராடிச் செல்வதை பாக்கியமாகக் கருதுகின்றனர். முக்கனியின் சுவை போலத் தித்திக்கும் இந்த அருவி நீரைப் பருகுவதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டும். வெளி மாநிலத்த வரும் தேடிவரும் நல்ல 'பிக்னிக் ஸ்பாட்'டும் கூட. அப்ப நீங்க?

*— ஆர். ஜேஸ்மின் ரமேஷ், கம்பம்.*

## பிழைக்கத் தெரியாதவர்?




மதுரை, ஜெய்ஹிந்த்புரம் மெயின் ரோட்டில் ஹோட்டல் வைத்து நடத்தும் நடராஜன் பெரிய குடும்பஸ்தர். ஆயினும் இரண்டரை ரூபாய்க்கு சாம்பார், ரசம், பொரியல், கூட்டு, மோர், ஊறுகாய் என்று இத்தனையையும் சேர்த்து அளவு சாப்பாடு தருகிறார். ஒரு காப்பியே நாலு ரூபாய் என்கிற நிலையில் இப்படியொரு ஹோட்டல் உரிமையாளரா?

''இதையொரு தொண்டாகவே செய்கிறேன்; என் உயிருள்ள வரை செய்து கொண்டேயிருப்பேன்!'' என்கிறார், நடராஜன்!

## அசத்தும் பத்திரிகைகள்!

தமிழ் மாதங்களின் முதல் தேதியன்று மதுரையிலிருந்து வெளிவரும் மாத இதழின் பெயர் நெசவு. கையெழுத்துப் பத்திரிகையான

இது சுமார் இருபது பக்கங்களைக் கொண்டது. கவிதைகள், கிழவன் பதில்கள், தலையங்கம் என்று எல்லாமே உண்டு. ஆண்டுதோறும் பிரபல எழுத்தாளர்களைக் கொண்டு ஆண்டு விழாவையும் நடத்தி வருகிறார்கள்.

மதுரையிலிருந்தே வெளிவரும் இன்னொரு சிற்றிதழின் பெயர், 'ஓ'. இதன் முதல் சிறப்பு, ஒவ்வொரு மாதமும் ஒரு வாசகர் இதில் பதிலளிப்பது தான். சிறந்த கேள்வி, துணுக்குகளுக்குப் பரிசுகளும் உண்டு. இதன் ஆசிரியர் யார் தெரியுமா? கூலி வேலை பார்க்கும் ஓர் எளிமையான தொழிலாளி!



- இரா. கல்யாண சுந்தரம், மதுரை - 9.

## குன்றுதோறும் குமரன்; அடிவாரம் தோறும் கல்லூரிகள்!

குன்றுதோறும் குமரன் குடிகொண்டிருப்பதைப் போல் மதுரை நகரைச் சுற்றியுள்ள மலைகளின் அடிவாரங்கள் தோறும் கல்வி மகளாகிய கலைமகள், கல்லூரிகள் வடிவத்தில் வீற்றிருப்பதைக் காணலாம்.

திருப்பரங்குன்றம் - தியாகராசர் பொறியியற் கல்லூரி; பசுமலை - மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி, சௌராஷ்டிரா கல்லூரி; நாகமலை - மதுரை காமராஜர் பல்கலைக் கழகம், வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி; யானை மலை - மதுரை விவசாயக் கல்லூரி; அழகர்மலை - ஆயிர வைசியக் கல்லூரி!

## தெரிந்து கொள்ளுங்கள்!

மதுரை நகரில் அதிகமாக வாழும் சௌராஷ்டிரா மக்களின் குடும்பப் பெயர்களில் சில : லகுடுவா, சொன்னியா, தப்பாளி, அப்பியா தெப்பே, வைத்தியம், புஞ்சா, மல்லி, மோர் கொண்டா நம்பி, பஜ்ஜி குடுவா, கெஞ்சி, புளியடி!

## ஜோக்!

''வரவர டி.வி.யில போடுற சினிமாக்களை குடும்பத்தோடு உட்கார்ந்து பார்க்க முடியலை. அதனால...''

''உங்க வீட்டு டி.வியை வித்துட்டீங்களா?''

''இல்லை! ஆளுக்கொரு டி.வியா வாங்கி, தனித்தனியா உட்கார்ந்து பார்க்கறோம்!

- வீ. பா. கிருஷ்ணன், மதுரை - 4.



# கோவாவில் நடந்த குதிரை வியாபாரம்!



• ஜி. ராமானுஜம்



• பிரதாப்சிங் ராணே

**அண்மையில் கோவா சென்று வந்த நமது நிருபருக்கு அங்குள்ள பாலிடிக்ஸ் நிலவரத்தை எழுதாமலிருக்க முடியவில்லை. அதன் விளைவுதான் இந்தக் கட்டுரை.....**

தேர்தல் நடந்தது சென்ற வருடம் நவம்பரில். வாக்கு எண்ணிக்கை டிசம்பரில். மந்திரி சபை பதவி ஏற்பு ஜனவரி கடைசியில். இந்த இடைவெளி போதாதா காங்கிரஸ் கட்சிக்கு? முதலில் பதினெட்டு இடங்களே பெற்றிருந்த கட்சி, சுறுசுறுப்பாகக் குதிரைகளை விலைக்கு வாங்கித் தன் பலத்தை இருபத்தி இரண்டாக உயர்த்திக் கொண்டது. (கோவா சட்ட சபையில் மொத்த இடங்கள் நாற்பது) பிரதாப் சிங் ராணே, நான்காவது தடவையாக கோவா மாநிலத்தின் முதலமைச்சரானார்.

இப்போது, சட்டசபையில் உள்ள 23 காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்களில், சபாநாயகர், துணை சபாநாயகர் போக பதினாலு பேர் அமைச்சர்கள். மீதிப் பேருக்கெல்லாம், வாரியத் தலைவர் பதவிகள். ஆனாலும், "ஆட்சியில் ஊழல் குறைவு; முதலமைச்சர் ராணே சிறந்த நிர்வாகி" என்பது பரவலான கருத்து.

கோவாவில் சிறு சிறு தொகுதிகள்தான் என்பதால், 'எம்.எல்.ஏக்கள் தொகுதிப் பக்கம் தலைகாட்டுவதில்லை' என்ற பேச்சுக்கு இடமில்லை. அமைச்சர்களிடமும் பந்தா கிடையாது.

1963 ல் நடந்த முதல் தேர்தலில் ஆட்சியைப் பிடித்த மகாராஷ்டிர கோமந்தக் கட்சி சார்பில் முதலமைச்சரான டி.பி. பந்தோல்கர் பதினொரு வருடங்கள் பதவியிலிருந்தது ஒரு சாதனை என்றால், திடீரென அவர் மரணமடைந்தபோது, அடுத்து முதலமைச்சரானவர் அவரது பெண் என்பதோடு, அவர் பெயர் சசிகலா என்பதும் விசேஷம்.

ஆனால், வீனா சந்திரவார்கர் என்ற நடிகையை மணந்து கொண்ட சசிகலாவின் சகோதரர் சித்தார்த்த பந்தோல்கரின் மரணம் சம்பந்தமாக எழுந்த பிரச்னை, 'உடன் பிறந்த சகோதரி' சசிகலாவின் பதவியைப் பறித்து விட்டது என்பது பழைய கதை!

போன தடவை அமைந்த சட்டசபையின் ஐந்தாண்டு காலத்தில், ஆறு பேர் முதல்வர் நாற்காலியில் அமர்ந்திருக்கிறார்கள்!

ரவி நாயக் (காங்) என்பவர் இரண்டு நாட்கள் மட்டுமே முதல்வர் பதவியில் இருந்தார். இன்னொரு சமயம் அவரே இரண்டு ஆண்டுகள் வரை தாக்குப் பிடித்தார். தற்போதைய முதலமைச்சருக்கு நாற்காலி யோகம் ஸ்டிராங்காய் இருப்பதாகத்தான் சொல்கிறார்கள்.

தற்போது கோவா கவர்னர் பதவியிலிருப்பவர் வெளியுறவுத் துறையின் முன்னாள் செயலாளரான ரொமேஷ் பந்தாரி. முன்பு கவர்னராக இருந்தவர், நம்ம ஊர் தொழிற்சங்கவாதி ஜி. ராமானுஜம். இருவருக்கும் நேரெதிர் குணாதிசயம். நம்மூர்க்காரரோ கலப்படமற்ற காந்தியவாதி. பந்தாரி சென்ட் பர்சன்ட் மேற்கத்திய கலாசார ஆசாமி.

ஜி. ராமானுஜம் கவர்னராகப் பதவி ஏற்றுக் கொண்ட மறுநாள், பத்திரிகையாளர் கூட்டத்தில், மது, சூதாட்டம் மற்றும் லாட்டரி இவை ஒழிக்கப்பட்டால்தான் காந்திஜி கண்ட ஜனநாயகம் மலரும் என்கிற தொனியில் பேசிவிட, மிரண்டு போனது மாநில அரசு. அவசரம் அவசரமாக கவர்னருடன் பேசி, சூட்டோடு சூடாய், "நான் தெரிவித்தவை என் தனிப்பட்ட கருத்துக்கள், அவற்றை மாநில அரசு பின்பற்ற வேண்டும் என்கிற கட்டாயமில்லை' என்று விளக்கம் வெளியிட ஏற்பாடு செய்ய வேண்டியதாகி விட்டது.

எளிய மனிதரான ஜி. ராமானுஜம், தம் காலத்தில் ராஜ்பவன் பராமரிப்புக்கான பட்ஜெட்டில் பாதிக்கு மேல் செலவழிக்காமல் அரசுக்குத் திருப்பித் தந்து விட்டார்.

ராஜ்பவனில் மது, சிகரெட்டுக்கும் 144 போட்டார்.

இப்போதைய ரொமேஷ் பந்தாரி, ராஜ்பவனை மேற்கத்திய பாணியில் மாற்றியமைத்து விட்டார்; தவிர, இரண்டே நாளில், ராஜ்பவனுக்காக சோபா, தரை விரிப்புகள் என்று ஏகப்பட்டதை வாங்கிப் போட்டார். வந்த பில் பதினைந்து லட்சம்! இது போதாதென்று ராஜ்பவன் பராமரிப்புக்காக, அதிக நிதி ஒதுக்கீடு கேட்டிருக்கிறாராம் கவர்னர்.

- எஸ். சந்திரமௌலி

# இருட்டு அரண்மனைகள்

கி. ராஜேந்திரன்

உதகை பயணம் பற்றி சாயாவிடம் பேச்சு எடுத்த போது, "திடுதிப்புன்னு சொன்னா எப்படி? லீவு போடாம, பர்மிஷன் கேட்காம ஓடிட முடியுமா? வேணும்னா உங்க பிள்ளையைக் கூட்டிட்டுப் போங்க. நாலு நாள் நான் நிம்மதியாய் இருக்கேன்," என்றாள்.

இதைத்தான் எதிர்பார்த்தான். சின்னியை அழைத்துப் போவது அவனுக்கும் சம்மதமாயிருந்தது. விஷயத்தைச் சொன்னதுமே, பெட்டி 'பாக்' பண்ணி ஸ்மார்ட்டாக டிரெஸ் செய்து கொண்டு புறப்பட்டு விட்டான். அவனுக்கு மிகவும் நேசமான மலைப்பகுதிகளுக்கு மறுபடி போவது கண்களில் ஒளியை வரவழைத்து.

"டிக்கெட் கிடைக்குமா? ஒவ்வொருத்தர் பத்துப் பதினைந்து நாள் முன்னதாகவே புக் பண்ணுறாங்களே!"

"ஈ.க்யூன்னு ஒண்ணு எதுக்கு இருக்கு?" என்று கேட்டு கட்டில் மேல் இருந்த பெட்டியில் பேண்ட் ஷர்ட்களை அடுக்கினான். சாயா, ஸ்வெட்டர் எடுத்துத் தந்தாள். "ஈ.க்யூன்னா?"

"எமர்ஜென்சி கோட்டா. ஏதாவது அவசரம் ஆபத்துக்குப் பயன்படுத்த ஏற்பட்ட ஒதுக்கீடு."

"இப்ப என்ன எமெர்ஜென்ஸி?" என்று பயந்தாள்.

"ஆபத்து இல்லே. அவசரம்னு வைச்சுக் கோயேன்."

நம்பிக்கை இன்றி அவனிடம் ஒண்டிக் கொண்டாள். "இப்படித்தான் சொல்வீங்க, ஆபத்தை விலைக்கு வாங்குவீங்க" என்று கழுத்தைச் சுற்றி வளைத்தாள். எட்டுவதற்கு அவள் எம்ப வேண்டியிருந்தது. "ஜாக்கிரதை" என்று விசும்பினாள்.

அவனுக்கு ரஸ்யாவின் நினைவு வந்தது. "அடடே எதுக்கு இப்படி அழறே? தைரியமா இரு. மனசு எப்பவும் அறிவின் கட்டுப்பாட்டிலேயே இருக்கணும்" என்று அவனிடம் சொன்னதையே சாயாவிடமும் கூறினான்.

பெட்டி சுமந்து ஹாலுக்கு வந்த போது, "சொல்லிண்டு கிளம்பறது" என்றார் மூன்றாவது பெட்ரூமிலிருந்து எட்டிப் பார்த்த அப்பா.

"உங்க கிட்டே அதிக நேரம் செலவழிக்க முடியறதில்லை. அதுக்காக நீங்க ஏங்கறது எனக்குத் தெரியும். என்ன பண்றது, என் தொழில் அப்படி" என்றான்.

"போடா, இடியட்! எனக்கு ஒண்ணும் அப்படியெல்லாம் குறை கிடையாது. நீங்க சௌக்கியமா, சந்தோஷமா இருக்கணும்கிறது தான் முக்கியம்."

"சமாதானத்துக்குச் சொல்றீங்க. இருக்கட்டும். என் உத்யோகம் தொடர்பா உங்க கிட்ட மனசு விட்டுப் பேசினா எனக்கே நல்லது. உங்களிடம்தான் நம்பிக்கையா பேச முடியும். தெளிவு பிறக்கும்."

"இப்ப போயிட்டு வா. அப்புறமா உனக்கு டைம் கிடைக்கறச்சே பேசலாம், சின்னி ஜாக்கிரதை."

"வரேம்மா, வரேன் தாத்தா!" என்றான் சின்னி. பிரியமாக முத்தமிட்டான். எல்லோருக்கும் ஆச்சர்யமாயிருந்தது. மலைகள் அவனை மானசீகமாக வரவேற்றுக் கொண்டிருந்தன. அவன் மனமெல்லாம் மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தது என்பது அவர்களுக்குத் தெரியாது.

மேலதிகாரி மயில் வாகனன் வர்ணித்திருந்ததை விடவும் ஆசிரமம் அழகாயிருந்தது. சூரிய ஒளி மரங்களின் முனைகளில் வடிகட்டப்பட்டு இறங்கி, பச்சை இலைகளுக்குப் பொன் முலாம் பூசின. சூரிய ஒளி விட்டு விட்டு உடலில் பட்டபோது, ஒத்தடம் தருவது போல குளிருக்கு இதமாய் இருந்தது. பேரி மரங்கள் புஷ்பிக்கிற பருவம். அந்தப் பசுமை மீது நட்சத்திர மண்டலம் காதல் கொண்டு, உல்லாசமாய் உறவாட இறங்கி விட்டிருந்தன. ஆசிரமத்துக்கு வந்த பிறகும் காதல் உவமையே தனக்குத் தோன்றுவது பற்றி இன்பசாகரன் சிரித்துக் கொண்டான். 'ஆனால் பிளம், செர்ரி, பேரி இவற்றை



யெல்லாம் காதலியின் அவயவங்களுக்கு அன்றி வேறு எதற்கு ஒப்பிட முடியும்? கவிஞர்கள் அப்படி நம்மைப் பழக்கி விட்டார்கள்.'

பிற்பகல் சுமார் நாலு மணி அளவில் சூரியனின் உஷ்ணம் இன்னமும் கதகதப்பாக உணர முடிந்த சமயத்தில், சூரியாசுவாமி ஆசிரமத்தின் பிரதான கட்டடத்தின் முன்னே மேடையில் வந்து அமர்ந்தார். பக்தர்களின் மரியாதைகளை ஏற்றுக் கொண்டார்.

சுமார் நாற்பது ஐம்பது பேர் எதிரே நாற்காலிகளில் அமர்ந்திருந்தார்கள். எத்தனை பேர் வருகிறார்களோ அந்த அளவுக்கு மட்டுமே நாற்காலிகள் போடப்படுவதைப் புரிந்து கொண்டான் இன்பா. சிறிய கூட்டமாயினும் பரவாயில்லை; காலி நாற்காலிகள் இருக்கக் கூடாது! நல்ல மனோதத்துவம்.

"நமது இதிகாசங்களுக்கு ஈடாக உலகில் ஏதுமே கிடையாது. அதிலும் ராமாயணம் சகல மக்களுக்கும் வழிகாட்டி. வழிகாட்டுவதற்காக தெய்வமே மனித உருக் கொண்டு வந்தது. ராமாவதாரத்தின் முக்கியமான நோக்கம் என்ன? ராவண சம்ஹாரம். அதை சர்வவல்லமை படைத்த கடவுள் கடவுளாகவே இருந்து சாதிக்க முடியாதா? ஏன் மனுஷ அவதாரம் எடுக்க வேண்டும்? ராவணன், தேவர், அசுரர், கின்னரர் கிம்புருஷர் போன்ற யாராலும் தனக்கு அழிவு கிடையாது என்று வரம் பெற்றிருந்தான். ஆனால் மமதை காரணமாக மனிதனை அதில் சேர்த்துக் கொள்ளவில்லை. அலட்சியப்படுத்தினான். அதனால் பகவான் மானுடனாக அவதரித்து, அவனை அழிக்க வந்தார் என்பது கதை. கதையை நாம் குறை சொல்ல வேண்டாம். பாமர மக்களுக்குக் கதைதான் எடுபடும். ஆனால் யோசித்துப் பாருங்கள். அண்ட சராசரமெல்லாம் ஆட்டிப் படைக்கிற சர்வ வல்லமை பொருந்திய கடவுளுக்கு ராவணசம்ஹாரம் ஒரு பெரிய விஷயமா?

"இல்லை... அவர் மனித அவதாரம் எடுத்ததற்கு அது காரணமில்லை. நம்மைப் போன்ற மனிதர்களுக்கு எடுத்துக் காட்டாகத் திகழ வேண்டும் என்பதற்காகத்தான் ராமாவதாரம். ராமபிரானின் ஒவ்வொரு சொல்லும் செயலும் நமது வாழ்க்கையை சீராக அமைத்துக் கொள்ள வழி காட்டுகிறது...."

அவர் பேச்சு அவனுக்குப் பிடித்திருந்தது. வெறும் கதையாக இல்லாமல் தத்துவமாக நிறையச் சொன்னார். ஆங்கில, சம்ஸ்கிருத இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் காட்டினார். சின்னிக்குத்தான் போர் அடித்தது. இரண்டு மூன்று தடவை அவன் எழுந்து போக முற்பட்ட போது, அவள் கையைப் பிடித்து இழுத்து உட்கார்த்தி வைக்க வேண்டியிருந்தது.

உபந்நியாசம் முடிந்ததும் பிரசாதம் கொடுத்தார். சூடாக நெய்யில் மிதந்த வெண்

பொங்கல். தொன்னையில் முந்திரிப் பருப்பும் மிளகும் எட்டிப் பார்த்தன. படு ருசி. கை கழுவி கர்சிப்பால் துடைத்துக் கொண்டு திரும்பினான்.

மேடையை நெருங்கி, "கொஞ்சம் பேசணுமே" என்றான்.

"பேசணுமா, விசாரிக்கணுமா?" என்றார்.

துணுக்குற்று அவர் முகத்தை ஏறிட்டான். புன்னகை பூத்தார். "எப்படி ஊகித்தேன்? அதிகார தோரணை காட்டிக் கொடுக்கிறது. ஆசிரமத்துக்கு வந்தாலும் ஆணவம் போக மாட்டேனென்கிறது."

"பழக்க தோஷம்" என்றான்.

"காட்டேஜ் வசதியா இருக்கா?"

"ரொம்ப."

"பையனை அனுப்பிவிடு. விளையாடிட்டு வரட்டும். நாம உள்ளே போகலாம், வா. குளிர் அதிகமாயிட்டிருக்கு."

குழந்தைகளுக்கு என்று ஏற்பட்டிருந்த சிறிய பூங்காவில் அவனை விளையாட விட்டான். "கொஞ்ச நேரம் விளையாடிட்டு காட்டேஜுக்குப் போயிடு. நான் சுவாமிகளிடம் பேசிட்டு வரேன்."

பிரதான ஆசிரமக் கட்டடம் அரண்மனை மாதிரி இருந்தது. சுவாமி உள்ளே நுழைந்ததும் மின் விளக்குகள் ஒளிர்ந்தன. வோல்ட்டேஜ் கம்மியாக இருந்தபோதிலும் விளக்குகளின் எண்ணிக்கையாலும் அவை பொருத்தப்பட்டிருந்த சூட்சுமமான இடங்களாலும் கூடம் பிரகாசமாய்த் தெரிந்தது.

ராமாயணக் காட்சிகள் பல அற்புதமான 'மியூரல்'களாக சுவரில் சித்திரிக்கப்பட்டிருந்தன. அவற்றைப் பார்க்கவே பலர் வந்தார்கள். அமைதியாகவும் பக்தியாகவும் மிருதுவாகப் பேசி நடந்தார்கள்.

சூரியா சுவாமி அவனைத் தனி அறைக்கு அழைத்துப் போனார். சின்ன அறை. திண்டு மெத்தையுடன் கூடிய வசதியான பீடத்தில் அமர்ந்தார். தரையில் கம்பளம் விரித்திருந்தது. சுத்தமாயிருந்தது. பணியாளை அழைத்து நாற்காலி போடச் சொன்னார்.

"வேண்டாம்" என்று தரையில் உட்கார்ந்தான். "ஆணவம் அழியட்டுமே!"

"மனசிலிருந்து அழியணும்" என்று கூறி புன்னகை புரிந்தார்.

"உபதேசம் பண்ணறவங்களுக்கே அழியக் காணுமே" என்றான்.

அவர் நெற்றி சுருங்க, "குற்றம் சாட்டுகிறாயா?"

"இல்லை சந்தேகத்தை வெளியிடுகிறேன். மனிதன் உள்ளத்திலிருந்து ஆணவம் அழிந்து போனால் குண்டுகள் ஏன் வெடிக்கின்றன? அகில பாரத ஹிந்து பரிவார் கட்டடம் ஏன் தகர்க்கப்படுகிறது? இந்த ஆசிரமத்தின் ஒரு பணியாளன் ஏன் அநியாயத்துக்கு உயிரை விடுகிறான்?"

"ஏகப்பட்ட கேள்விகளை ஒரே சமயத்தில் எழுப்புகிறாய்" என்றார் புன்சிரிப்பு மாறாமல்.

"ஒன்றுக் கொன்று தொடர்புள்ள கேள்விகள்தானே?"

"இந்த ஆசிரமத்தில் எம்மதமும் சம்மதம் என்பதுதான் அடிப்படை நோக்கம். உனக்குத் தெரிந்திருக்கும். இன்று ராமயணம் பற்றிப் பேசினால் நாளைக்கு திருக்குரான் பற்றியும் அடுத்த நாள் பைபிள் பற்றியும் பேசுவேன். கிறிஸ்துவர்கள், முஸ்லிம்கள் சிலர் மதம் மாற்றுகிறார்களே என்றால் அது அவர்கள் மத தர்மம். நம்முடைய ஹிந்து மத தர்மம் இறைவன் ஒருவனே என்கிறது. எந்த மார்க்கத்தைப் பின்பற்றினாலும் அவனை அடையலாம் என்கிறது. நம்முடைய தர்மத்தை நாம் கடைப்பிடித்தால் போதும். இந்து மதத்துக்கு ஒரு ஆபத்தும் வராது. பயப்பட வேண்டாம்."

"உங்க உபந்நியாசத்தை நான் வெளியே கேட்டு ரசிச்சேன். இங்க மறுபடியும் அதைக் கேட்க வரலை."

"இது உபந்நியாசமில்லே நாட்டு நடப்பு. இந்தக் கருத்தைப் புரிந்து கொள்ளாததால்தான் இந்துமத தீவிரவாதிகள் தோன்றுகிறார்கள். அவர்களை எதிர்க்க பிற மதங்களிலும் அடிப்படை வாதம் பிறக்கிறது. குண்டு வெடிக்கிறது. நானும் பேப்பரில் படிச்சேன், வருத்தப்பட்டேன். வேறென்ன சொல்ல?"

"ஏற்கெனவே கேட்டேனே. இந்த ஆசிரமத்தைச் சேர்ந்த ஒரு பணியாள் அந்த குண்டு வெடிப்பு சம்பவத்தில் ஏன் உயிர் பலியானான்?"

"குண்டு வைத்தவர்கள் இருவர் என்றும் ஒருவன் தப்பிவிட இன்னொருவன் உருத் தெரியாமல் அழிந்து போனான் என்றும் செய்திகள்

---



**"ரஜினி கட்சி ஆரம்பிச்சா வெற்றி நிச்சயம்!"**

**"எப்படி சொல்றீங்க...?"**

**"அவருக்கு ஒரு வோட்டு விழுந்தா நூறு வோட்டு விழுந்த மாதிரி!"**

**— த. சந்திரசேகரன்**



"ஆகாயத்தில் அடிக்கடி விமானம் பறக்கணும்!"

"சே! தமிழன் தலை நிமிர என்ன வழின்னு உங்களிடம் போய் கேட்டேன் பாருங்க!"

— உ. ராஜாஜி

வந்திருந்தன."

"அப்படி அழிந்து போனவனின் ஒரு கை மட்டும் சிதறி எதிர் வீட்டு மொட்டை மாடியில் விழுந்து கிடந்தது. அதிலே இந்த ஆசிரமத்தின் சின்னம் பச்சை குத்தப்பட்டிருப்பது தெரிந்தது."

"உடனே ரயிலேறி இங்கே வந்துட்டாயாக்கும்!"

"வேறே எங்கே போவது?"

சூரியாகவாமி பெருமூச்சு வெளிப்படுத்தினார். "தமிழக போலீஸ் இவ்வளவு தரம் தாழ்ந்து போகணுமா? ஐ.டி. கார்டு இருக்கா?"

எடுத்துக் காட்டினான்.

"ஓ! சி.பி.ஐ. அப்ப இன்னும் கொஞ்சம் சாமர்த்தியமா நடந்துக்கலாமே?"

"எப்படி?"

"அதை நீதான் முடிவு பண்ணணும். ஆனா உன்னோட தர்க்க வாதத்துல இருக்கிற ஓட்டைகளை மட்டும் சொல்றேன். முதலாவது எம்.ஜி.ஆர். மாதிரி பச்சை குத்திக் கொள்ளுங்கன்னு நான் இங்க யாருக்கும் உத்தரவு போட்டது கிடையாது. சுற்றி வந்து விசாரி, எல்லாரையும் கையை நீட்டச் சொல்லிப் பாரு. இரண்டாவது, பச்சை குத்திக் கொள்ள ஆசைப்படறவங்களுக்கு மிக பிரபலமான சின்னங்கள் சீட்டுக் கட்டில் உள்ள ஆடுதன், இளாவர் போன்றவை தாம். நானே பிரபலமான எளிய சின்னமா இருக்கணும்னுதான் அதைத் தேர்ந்தெடுத்தேன். ஆடுதன்ல ஒரு அம்பு பாயற மாதிரி பச்சை குத்திக் கொள்றது ரொம்ப சகஜம். அப்புறம் இளாவர். எளிய மக்களுக்கு அரசியல் கலப்பு இல்லாத சின்னங்கள்னா சீட்டுக்கட்டு சின்னங்கள்தான் முதல்ல ஞாபகம் வரும். அதனால இந்த ஆசிரமத்தைச் சேர்ந்தவங்கதான் இளாவர் சின்னத்தைப் பச்சை குத்திக் கொள்ளணும்கிற அவசியமில்லே. மூன்றாவது அந்த ஆளுக்கு ஒரு கூட்டாளி இருந்தான்னு செய்தி. அவன் எப்படி இருந்தான்? இப்ப அவன் எங்கே? அவனைத் தேடிக் கண்டுபிடி! கேஸ் முடிஞ்சுடும். ஃபைல் குளோஸ் பண்ணலாம்."

"அவனோட 'ஸ்கெட்ச்' இருக்கு. ஆனா அவனை எங்கேன்னு போய்த் தேடறது" என்று சொல்லும்போதே, "அதற்குத்தான் சம்பளம் வாங்குகிறாய்" என்று சூர்யாசுவாமி முகத்தில் அடிக்கக் கூடும் என்று உணர்ந்தான்.

ஆனால் அப்படி அவர் கூறவில்லை. "எனக்கு தியானத்துக்கு நேரமாகி விட்டது" என்று எழுந்தார்.

இந்தத் தொழிலில் தோல்விகள் சகஜம். தோல்விப் படிகளின் மீது ஏறித்தான் வெற்றியை அடைய முடியும் என்பது அவன் அறியாதது அல்ல. ஆனாலும் தர்ம சங்கடமாயிருந்தது.

"எனக்கு நேரம் ஒதுக்கியதற்கு நன்றி" என்றான்.

"என் நேரமெல்லாம் மக்கள் பணிக்கு. அவர்களுக்கு உதவிய நேரம் போக மீதம் உள்ளது பிரார்த்தனைக்கு, தியானத்துக்கு. அதுவும் மக்கள் நலனுக்காகத்தான்."

"நான் வரேன்" என்றான்.

"என்ன அவசரம்? இரண்டு நாள் இருந்து போ. குண்டலினி சக்தி அது இது என்று சொல்லி உன்னை பயமுறுத்த நான் விரும்பலை. பத்மாசனத்தில் இருந்து கண்ணை மூடு. புருவங்களுக்கு மத்தியில் 'ஓம்' எழுது. அதையே தியானம் பண்ணு. உள்ளத்தில் ஒரு பிரகாசம் உண்டாகும். அறிவு கூர்மை பெறும். வெற்றி பெறுவாய்."

ஆசி வழங்கும் பாவனையாக கை உயர்த்தினார். உள் கதவு திறந்து போய்விட்டார்.

தனித்து அந்தச் சிறிய அறையில் விடப்பட்டவனை ஒரு வெறுமை ஆட் கொண்டது. அது சீக்கிரமே, தான் இங்கே வந்து சேரக் காரணமான அனுபமா மீது கோபமாக மாறியது. இயலாமையின் விளைவான ஆத்திரம் என்று உள்ளுணர்வு சொன்ன போதிலும் அதை ஒதுக்கினான். 'அவள்தான், அவளால் தான்' என்று திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டு அதையே நம்பினான்.

காட்டேஜுக்குப் போன போது அவன் மனம் போலவே இருண்டு கிடந்தது. "சின்னி! சின்னி!" என்று அழைத்தான். விளக்குப் போட்டுத் தேடினான். அவளை விட்டு வந்த, குழந்தைகள் விளையாடுமிடத்துக்கு ஓடினான்.

ஒரே ஒரு மெர்குரி விளக்கு மங்கலாக ஒளி பரப்ப, சறுக்கு மரமும் ஸீ-ஸாவும் கேட்பாரின்றிக் கிடந்தன.

(தொடரும்)

# தேவேந்திரா சாரீஸ்

**மிக மிக உயர்ந்த பட்டும், நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**
**அறிமுகப்படுத்துகிறோம்.**
**தேவேந்திராவின் ஸ்பெஷல் காட்டன் சாரீஸ்**
**H.O. 27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை – 3, போன் : 583213.**
**கிளை ஷோ-ரூம் கடை எண் : 7, ராம்ஸ் பஜார்**
**(பனகல் பார்க் எதிரில்)**
**தியாகராய நகர், சென்னை - 17. போன் : 8283367**

## தேவேந்திரா புடைவைகள் கிடைக்கும் இடங்கள் :

• மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41 , சரஸ்வதி மார்க், W.E.A. கரோல்பார்க், புதுடில்லி - 110 005; • காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ் (சவுத் எண்டு) 9A/40, W.E.A. கரோல்பார்க், புதுடில்லி, போன் : 5723981; • பங்கஜம் சுந்தரராஜன், C6/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடில்லி – 67; • நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய் – 19; • ஜெயஸ்ரீ, 2-A, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா – 26; • திருமதி. துர்காம்பாள், தரங்கிணி, 26, லாவண்யா கார்டன்ஸ், வயலூர் ரோடு, திருச்சி – 620 017. போன் : 34422; • சித்ரா அசோசியேட்ஸ், 50/B, பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம் . போன் : 20972; • ஸ்ரீவரலக்ஷ்மி, 104, தமிழ்ச் சங்கம் ரோடு, (அண்ணா பார்க் பின்புறம்), சேலம் - 636 007. போன் : 62886; • ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, சென்குப்தா தெரு, கோயம்புத்தூர் – 9; • ஸ்ரீமுருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர்.எஸ்.புரம், கோவை – 2; • முருகன் சில்க் ஹவுஸ், 439, என்.எஸ்.ஆர். ரோடு, சாய்பாபா காலனி, கோவை – 11; • பிரியா சாரீஸ், 4, மஞ்சனக்கார தெரு, மதுரை – 1, போன் : 33000; • சுந்தரம் டெக்ஸ்டைல்ஸ், 90, தெற்கு மாசி வீதி, மதுரை - 1, போன் : 25152; • மகாலட்சுமி சில்க் சென்டர், தின் பில்டிங் (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம்; • ஹேமாவதி ஏஜென்ஸீஸ், 2711, நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர்; • பாகீரதிமூர்த்தி, 100, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி; • எஸ்.ஆர். பகவதி, 15, பள்ளத் தெரு, வடிவீஸ்வரம், நாகர்கோவில்; • கே. என். கிட்டப்பா, 61, யானைக் கட்டித் தெரு, சின்ன காஞ்சிபுரம்; • திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை - 61. (பிள்ளையார் கோவில் அருகில்) போன் : 2343737; • பாலாஜி கிளாத் சென்டர், 22-ஏ, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை – 45; • திருமதி. சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை – 44; • கலா மோகன், 115, ராகவாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை – 11. போன் : 575483; • ஹேராம் சாரி ஷாப், 15, வடக்கு மாடவீதி, திருவல்லிக்கேணி, சென்னை – 5; • பார்வதா சாரீஸ், 1, வடக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை – 4; • எஸ். பொன்னப்பன் டெக்ஸ்டைல்ஸ், 2வது பஜார், (மார்க்கெட் போலீஸ் ஸ்டேஷன் அருகில்), செகந்திராபாத் – 500 003. போன் : 877938, 875562; • கபில் டிரேடர்ஸ், நெ. 7, பெரிய கண்ணாரத் தெரு, மயிலாடுதுறை; • திருமதி கமலா நாகஸ்வாமி, 52, சரஸ்வதி நகர், கடலூர், போன் : 112; திருமதி பிரேமா குருராஜன், 33, ஆஞ்சநேயர் கோவில் தெரு, தருமபுரி – 2; • எஸ். உமாராணி, 132, செட்டித் தெரு, பாண்டிச்சேரி.

**குறிப்பு : மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல**

# ஸ்ரீராம் வழங்கும் 12 நாள் வண்ணத் திருவிழா!

22 செப்.'95 முதல் 3 அக்.'95 வரை

ஸ்ரீராம்

## வண்ணம் சேர்த்து

ஒன்று முதல் பத்து லட்சம் வரை உங்களை எண்ணும்படி சொன்னால் என்ன செய்வீர்கள்? அப்படியே பிரமித்துப் போய் விடுவீர்கள். ஆனால், ஸ்ரீராம் அவ்வாறு எண்ணியிருக்கிறது. அதுமட்டுமல்ல. பத்து லட்சம் வாடிக்கையாளருக்கு ஒருவர்விடாமல் சேவை அளித்தும் வருகிறது.

ஒவ்வொரு நாளுமே பரிசுத் தொகையாக ரூ. 11/2 கோடி வரை விநியோகிக்கிறோம். பதிலுக்கு, மனநிறைவு பெறும் வாடிக்கையாளர்கள், அதனால் தாங்கள் பெருமிதம் கொள்வதைத் தெரிவிப்பதோடு எங்கள் நேர்மை தவறாத நடைமுறைகளைப் பாராட்டவும் செய்கிறார்கள்.

இப்போது இந்த 12 நாள் வண்ணத்திருவிழாவில் எங்களுடன் சேர்ந்து பங்கேற்க உங்களை அன்போடு அழைக்கிறோம்.

ரூ. 75,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத்துறை அல்லது தனியார்துறை அல்லது அரசுப்பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் நிர்ணயிக்கப்பட்ட ஊதியம் பெறும் மூன்று பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது. வேலையில் இருக்கும் பெண்மணி ரூ. 15,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும் போது அவருடைய கணவரின் உத்தரவாதமே போதுமானது.

மகிழ்ச்சி பெற வாருங்கள். பரிசு பெற வாருங்கள்.

### சந்தாதாரர் பரிசு

| வ.எண் | சீட்டு மதிப்பு | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1 | 250 x 40 = 10,000 | S.S. ஃப்ரூட் ப்ளேட் |
| 2 | 500 x 30 = 15,000 | 5 கிராம் வெள்ளிக்காசு |
| 3 | 625 x 40 = 25,000 | S.S. பௌல், மூடியுடன் |
| 4 | 500 x 60 = 30,000 | செல்லோ ஹாட் லன்ச் பேக் (3 ஸ்டார்ஸ்) |
| 5 | 1,000 x 50 = 50,000 | S.S.C.B. டீப் கடாய் |
| 6 | 2,500 x 30 = 75,000 | S.S.C.B. ஸ்டு அண்ட் சேர்வ் |
| 7 | 2,500 x 40 = 1,00,000 | S.S.C.B. க்ளாஸிக் ஸாஸ் |
| 8 | 5,000 x 30 = 1,50,000 | H.M.A.C. மில்க் பேன் |
| 9 | 5,000 x 40 = 2,00,000 | S.S.C.B. இட்லி குக்கர் |
| 10 | 10,000 x 30 = 3,00,000 | 2 கிராம் தங்கக்காசு |
| 11 | 20,000 x 25 = 5,00,000 | 4 கிராம் தங்கக்காசு |

* நுழைவுக்கட்டணம் தள

1

2

3

4

5

6

7

8

9

10




# உங்களை அன்போடு அழைக்கிறது...

# உங்கள் வாழ்க்கையை ஒளிபெறச் செய்யுங்கள்




## மகிழ்ச்சியின் பாதையை நண்பருக்கு அறிமுகம் செய்யுங்கள்

ஸ்ரீராம் சிட்டு சந்தாதாரராக ஆவது மகிழ்ச்சி. ஒவ்வொரு முறையும் பயனுள்ள அழகிய பரிசுகளைப் பெறுவது மகிழ்ச்சி. கவலையும் சிரமமும் இல்லாத எதிர்காலத்துக்கு வழி காண்பது மகிழ்ச்சி.

இத்தகைய மகிழ்ச்சியின் பாதையை உங்கள் நண்பருக்கு அறிமுகம் செய்யுங்கள்.

ஏற்கெனவே உங்களுக்கு நாங்கள் அனுப்பியிருந்த மடலின் மூலம் ஒரு நீல நிற வளையம் கிடைத்திருக்கும். அதனை ஸ்ரீராம் கிளையில் அளிக்கும் போது ஒரு பரிசுப்பொருளும் ஒரு சிவப்பு வளையமும் உங்களுக்குக் கிடைக்கும்.

அடுத்ததாக உங்களை வந்தடையும் மடலில் உங்கள் வளமைக்கு வண்ணம் சேர்க்கும் மர்மக் கூப்பன் ஒன்றும் இடம் பெறுகிறது. அதன் மூலம் மூன்றாவதாக ஒரு வளையம் உங்களுக்குக் கிடைக்கவிருக்கிறது. எனவே, ஒரு புதிய சந்தாதாரரை நீங்கள் அறிமுகம் செய்யும்போது, இந்தக் கூப்பனையும் அளியுங்கள். உடனே உங்களுக்கு ஒரு காப்ஸ்யூல் தரப்படும். அதனை வெட்டும்போது மூன்றாவது வண்ண வளையம் உங்களுக்கும் கிடைக்கும். மற்ற இரண்டு வண்ண வளையங்களோடு இதனையும் ஒட்டுங்கள். பரிசு பெற்று மகிழுங்கள்.




அறிமுகப்படுத்துவோர் பரிசு
இப்போதுள்ள
சந்தாதாரர்களுக்கு
மட்டுமே.

**Shriram**
Group Companies
ALL INDIA
DEPOSIT
MOBILISATION
DRIVE IS ON.




முன் அங்கீகாரம் பெறப்பட்டது.

**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.

**ஸ்ரீராம்** சிட்ஸ்
தமிழ்நாடு பி. லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700/8523932/8522651/
8525536/8520797

*ஸ்ரீராம் சிட்ஸ் —*
*உங்கள் வளமைக்குப் பாதை.*

ADWAVE/SC/5127 TAM B



# என்கார்

## உறுதியான உத்திரவாதம்

100% Property Security

# 30% வருட வட்டி

100% Property Security

பல நிதி நிறுவனங்களுக்கு நடுவில் முதலீட்டிற்கு முதன்முதலாக அசையா சொத்துக்களை உத்திரவாதமாக அளித்து, பல்லாயிரக்கணக்கான முதலீட்டாளர்களின் நம்பிக்கை பெற்ற உங்கள் என்கார் நிறுவனம் வழங்கும்

"என்கார் ராயல் டெபாஸிட், என்கார் மெகாபாண்ட் மற்றும் என்கார் பொன்மகள் பாண்ட்"

### என்கார் ராயல் டெபாஸிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | வட்டி விகிதம் | |
|---|---|---|
| ரூ. 5000/- | 30% வருட வட்டி | 12 மாதங்களுக்கு வட்டி மாதாந்திர பின் தேதியிட்ட காசோலை மூலம் முன்னதாகவே வழங்கப்படும் |

### என்கார் மெகா பாண்ட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 10,000/- | $2\frac{1}{2}$ ஆண்டுகள் | ரூ 20,000/- (உங்கள் முதலீடு இரண்டரை ஆண்டுகளில் இரு மடங்காகிறது) |

### என்கார் பொன்மகள் பாண்ட்

| டெபாசிட் தொகை | முதிர்வு தொகை |
|---|---|
| ரூ. 3,000/- | ரூ 2,00,000/- 20-வது ஆண்டு முடிவில் |

ரூ. 25,000/-ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு பன்மடங்கு விலை உயரக்கூடிய நிலத்தின் ஒரு பகுதியை பதிவு செய்து தருகிறோம்.

# ENCAR Hi - Grow Investments

★ ENCAR Animal Farms & Exports (P) Ltd., ★ ENCAR Cashew Gardens (P) Ltd.,
★ ENCAR Dairy Foods Ltd.,

**Registered Office :**
10 & 11 Varadharaju Complex, (Easwari Complex),
Near Chatram Bus Stand,
Trichy - 620 002. Tel : 25963
Fax : 0431 - 42750 Telex : 0455-316 ACES IN

**Branch Office :**
134/2, Royapattiah High Road,
Near Vivek & Co,
Luz Corner, Mylapore, Madras - 4
Ph : 8526806, 8526887

## உங்கள் முதலீட்டிற்கு உத்திரவாத உயிர்நாடி - என்கார்




1995 செப்டம்பர் 24
யுவ புரட்டாசி 7
மலர் : 54
இதழ் : 8


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## மெகா அமைச்சரவை; மகா வேடிக்கை!

ஐந்து அமைச்சர்களை வெளியேற்றிய நரசிம்மராவ், பதினாறு புதியவர்களை நியமித்து, அமைச்சரவை உறுப்பினர் எண்ணிக்கையை எழுபத்தியொன்றாக உயர்த்தியிருக்கிறார்!

பொதுத் தேர்தலுக்கு ஒருசில மாதங்களே உள்ள நிலையில், இந்த அமைச்சரவை விஸ்தரிப்பு அவசியம்தானா?

இந்த நடவடிக்கையின் நோக்கம், காங்கிரஸ் கட்சியின் பல பிரிவினரையும் திருப்திப்படுத்துவதுதான்; மாநில, மதப் பிரிவுகளுக்குப் பிரதிநிதித்துவம் கொடுத்து நல்ல பெயர் வாங்கும் முயற்சி!

ஆனால், இந்த நோக்கம் கூட நிறைவேறவில்லை என்பதையே, கட்சியின் பல மட்டங்களிலும் எழுந்துள்ள முணுமுணுப்பு உணர்த்துகிறது.

நாட்டுநலனைக் கருதாமல், அடுத்த தேர்தலில் வெற்றி பெற வேண்டும் என்ற அரசியல் நோக்கில் மட்டுமே செயல்பட்டுள்ளார் பிரதமர்.

இதனால் பதினாறு மத்திய அமைச்சர்களின் சம்பளமும் இதர சலுகைகளும் சேர்ந்து கூடுதல் செலவுதான் ஏற்படப் போகிறதேயொழிய, அமைச்சரவை முன்னை விட பிரமாதமான சாதனைகள் புரிந்துவிடப் போவதில்லை!




தமது அமைச்சரவையை இஷ்டப்படி தேர்வு செய்யும் உரிமை பிரதமருக்கு இருக்கிறது. ஆனால் அமைச்சரவை என்பது, அளவாக, கட்டுப்பட்ட எண்ணிக்கையில் இருந்தால்தான் அதனை நிர்வகிப்பதும் அதன் உறுப்பினர்கள் திறம்பட இயங்குவதும் சாத்தியம்.

இதில் மிகப் பெரிய வேடிக்கை என்னவென்றால், இந்த விஸ்தரிப்பு அறிவிக்கப் படுவதற்கு முந்தைய தினம்தான் 'அரசு செலவினங்களைக் குறைத்து, சிக்கன நட வடிக்கை மேற்கொள்ள வேண்டும்' என்று மன்மோகன் சிங் பேசியிருக்கிறார்!

ரிசர்வ் வங்கி அறிக்கையும் இதையே வலியுறுத்தியிருக்கிறது. நாடே 'கடன் கண்ணி'யில் சிக்கிக் கொண்டு மீள முடியாமல் திணறும்' என்று எச்சரித்துள்ளது.

இப்போது போல் மேலும் மேலும் கடன் வாங்கிக் கொண்டே போனால், அரசின் வருவாய் முழுவதுமே, வட்டி, கடன் தவணைகளைத் திருப்பித் தருவதற்குக் கூட போதுமானதாக இராது.


“

இதில் மிகப் பெரிய வேடிக்கை என்னவென்றால், இந்த விஸ்தரிப்பு அறிவிக்கப்படுவதற்கு முந்தைய தினம்தான் 'அரசு செலவினங்களைக் குறைத்து, சிக்கன நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்' என்று மன்மோகன் சிங் பேசியிருக்கிறார்!

”




**● அரசின் ஊதாரிச் செலவினங்களைப் ●**
**பார்க்கும், உணரும் மக்கள்,**
**தாங்களும் அவ்வாறே ஆடம்பரச்**
**● செலவு செய்து, கடனாளியாகிறார்கள். ●**

இதையும்விட பெரிய அச்சுறுத்தல் என்னவெனில், மக்களும் தங்கள் பங்குக்குக் கடன் சுமைகளை அதிகரித்துக் கொண்டே போகிறார்கள். ரிசர்வ் வங்கி அறிக்கை இதனையும் சுட்டிக்காட்டியுள்ளது.

'அரசன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்பதற்கேற்ப, அரசின் ஊதாரிச் செலவினங் களைப் பார்க்கும், உணரும் மக்கள், தாங்களும் அவ்வாறே ஆடம்பரச் செலவு செய்து, கடனாளியாகிறார்கள்.

எவ்வளவோ எச்சரித்த பின்னரும் அரசு, வரம்பு மீறி நோட்டுகளை அச்சடிப்பதில் ஒரு சாதனையே புரிந்துள்ளது என்பதையும் ரிசர்வ் வங்கி அறிக்கை சுட்டிக்காட்டு கிறது.

சமுதாய நலத் திட்டங்கள் என்ற பெயரில் நடக்கும் வீண் விரயங்கள் பெருகிக் கொண்டேயிருக்கின்றன. உற்பத்திக்கு உதவும் திட்டங்களுக்குப் போதிய ஒதுக்கீடு இல்லை!

விலைவாசி உயர்ந்து கொண்டுதான் இருக்கிறது; பண வீக்கம் பெருகிக் கொண்டே யிருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில், அமைச்சர் பதவி கொடுப்பதன் மூலம் ஒருசில குட்டித் தலைவர்களை வேண்டுமானால் திருப்திப்படுத்தலாம். ஆனால் மக்களுக்கு அதனால் எந்தப் பலனும் கிடைக்கப் போவதில்லை!

## டாலர்களைத் தூக்கிச் சாப்பிட ஒரு ரூபாய்!

● 'அகம்பாவம் என்.டி.ஆரை வீழ்த்தியுள்ளது என்றாலும், பெரும்பான்மை பெற்றுள்ள சந்திரபாபு நாயுடு, அதை நேர்மையான முறையில் அடையவில்லை என்பதே உண்மை' என்ற தலையங்க வரிகளால், ஆந்திர அரசியலையே, கண் முன் கொண்டுவந்து தெளிவுபட நிறுத்திக் காட்டிவிட்டீர்கள். சபாஷ்!

கும்பகோணம், எஸ்.கே.மூர்த்தி

● "ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னால் ஒரு பெண் இருப்பாள்" என்பதற்கு உதாரணமாக இருந்திருக்க வேண்டிய சிவ பார்வதி "ஆவதும் பெண்ணால் அழிவதும் பெண்ணால்" என்கிற பழமொழிக்கு உதாரணமாகி விட்டார்! 'என்.டி.ஆரின் வீழ்ச்சி ஆணவத்தின் எதிரொலி' எனும் தலையங்கம் சிறப்பாக இருந்தது. பாராட்டுகள்

பெங்களூர், ப.மூர்த்தி

● தலையங்கத்தில் என்.டி.ராமராவின் வீழ்ச்சி; சூழ்ச்சியால் இறந்த பியாந்த் சிங்க்கு ஒரு அஞ்சலி; நம் தமிழ் முதல்வருக்கொரு 'குட்டு'. மூன்றுமே முத்துக்களாய் ஜொலித்தன!

விழுப்புரம், வை.சண்முகவேல்

● கழுதை அமைச்சரான கதையைப் படித்து, தற்போதுள்ள நிலைமையை ஒப்பிட்டுப் பார்த்தோம். வயிறு வலிக்கச் சிரித்தோம்.

கொப்பம்பட்டி, செ.அன்புமதி கோபிநாத்

● "தாரகை" - உணர்வுகளை விவரிக்க இயலவில்லை. மனிதாபிமானமும் நற்குணமும் பணத்தின் முன் மண்டியிடுகின்ற கொடுமையை இத்தனை நாசூக்காய்ச் சுட்டிக்காட்டி உள்ளாரே சிறுகதை ஆசிரியர்!

ஈரோடு, டி.சந்திரன்

● அட்டையில் திறமைமிக்க, ஒரு வாசகரின் படத்தைக் கண்டதில் அளவில்லாத மகிழ்ச்சி.

சங்கரன்கோயில் கோ.ரா.சந்திரன்,

● 'மகன்' சிறுகதையில் வரும் முருகானந்தம் போல் எல்லா இளைஞர்களும் மாறி விட்டால் வரதட்சணை, அதனால் ஏற்படும் சிக்கல் அனைத்துமே இல்லாமல் போய் விடும்; நல்ல கருத்தைச் சொன்ன கதை.

குமராட்சி, எம்.பிரபு

● ஆண்களும் நாட்டியத்தில் பெண்களுக்குச் சிறிதும் சளைத்தவர்கள் அல்ல என்பதை நிரூபித்த 'புருஷ்' நிகழ்ச்சி பற்றிய செய்தி ஆச்சரியத்தைத் தந்தது. பொறுப் பேற்று நடத்திய அனிதா ரத்னம் மிகவும் பாராட்டிற்குரியவர்.

தஞ்சாவூர், வனிதா ரவி

### ரூ.20 பரிசு பெறும் கடிதம்:

● "உலகில் சக்தி வாய்ந்த கரன்ஸி எது என்று நினைக்கிறீர்கள்? டாலரோ, ஸ்டெர்லிங்கோ டூஷ் மார்க்கோ அல்லது ஜப்பானிய யென்னோ அல்ல. இந்திய ஒரு ரூபாய்தான் மிகமிகச் சக்தி வாய்ந்தது. எப்படி என்று கேட்கிறீர்களா? ஒரு ரூபாய் நாணயத்தால் 30 ஏக்கரில் பிரும்மாண்டமான பந்தல் அமைத்துத் திருமணம். ஒரு ரூபாயில் ஒரே நேரத்தில் ஒரு லட்சம் பேர் சாப்பிட ஏற்பாடு. ஒரே ரூபாயில் வெள்ளித் தட்டில் குங்குமச் சிமிழ், சந்தனக் கும்பா, பட்டுச்சேலை, பட்டு வேஷ்டியுடன் அழைப்பிதழும் தர முடியும். விரைவில் நமது ஒரு ரூபாய் நாணயத்தை வெளிநாட்டுக்காரர்களும் கேட்கப் போகிறார்கள். நான் கூட இனிமேல் வெளிநாடு போகும்போது இந்த ஒரே ஒரு ரூபாய் நாணயத்தைத் தான் கொண்டு போகப் போகிறேன்!

மானாமதுரையில் மத்திய அமைச்சர் ப.சிதம்பரம் பேசியது.

வடவள்ளி, ஆர்.ராமசுப்ரமணியம்

● மதுமனோ எழுதி பிரசுரமான "கருணை மனு" என்ற கதை நெஞ்சைத் தொட்டது. மானேஜிங் டைரக்டர் ஹர்ஷவர்தன் போன்ற இதயமுள்ள அலுவலர்களும் இந்த உலகத்தில் இருக்கிறார்கள் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

காட்டுமன்னார்குடி, ந.சுப்பாராவ்

● 3.9.95 தேதியிட்ட "கல்கி" இதழில் "காந்தி பிறந்த மண்" விமர்சனத்தில் என்னைப் பாராட்டி இருக்கிறீர்கள். என்னுடைய 27 வருட திரையுலக அனுபவத்தில் மேக்கப் மேனான என்னை முதன் முதலாக "கல்கி" பாராட்டியது கண்டு அகமகிழ்ந்தேன். நெஞ்சார்ந்த நன்றி!

சென்னை-87, எம்.ராஜு

● வளர்ப்பு மகன் திருமணம் பற்றிய கட்டுரையைப் படித்தேன். ஆகஸ்டு 15, 1947 அன்று நான் சென்னையில்தான் இருந்தேன். நாடு விடுதலை பெற்ற அந்த நாளில் கூட சென்னை மாநகர் இந்த அல்லோல கல்லோலப் படவில்லை. ஆடம்பரத் திருமணம் மட்டுமல்ல; டம்பத் திருமணம் இது.

சென்னை-14, பொ.வஜ்ரவேலு

வட்டமேஜை




# TAMIL NADU PEOPLE'S BENEFIT FUND (PURASAWALKAM) LTD.,

79, Perambur Barracks Road, Purasawalkam, Madras - 600 007.
Central Government Approved (Reg. No. 18-21907/91) ☎ 6414536, 5323360

## DEPOSIT SCHEME

| | 46 Days | 3 Months | 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|---|---|---|
| FIXED DEPOSIT | 15% | 16% | 17% | 18% | 19% | 20% | 21% |

## 21% FOR SENIOR CITIZEN SPECIAL SCHEME

for Rs. 10,000/- and above 1 Year

21% for Rs.50,000 and above 5 Years-for all

**Your Deposit Doubles in 42 months Triples in 70 months.**

| | |
|---|---|
| TNPBF HAPPY DAY MONEY BACK SCHEME | Pay Rs. 1000 on your happy day continuosly for 4 years and take Back Rs. 1250- every year on your happy day from the 5th year onwards for life long. |

| | Rs. | 1 Year | 2 Year | 3 Year | 42 Months | 70 Months | 84 Months |
|---|---|---|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000 | 1,195<br>5,975 | 1,450<br>7,250 | 1,760<br>8,800 | 2,000<br>10,000 | 3,000<br>15,000 | 4,000<br>20,000 |

## "TAMIL MAHAL SELVAKALANCHIZAM" SCHEME

| | Rs. | 10 Years | 15 Years | 18 Years |
|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000<br>10,000 | 6,920<br>34,500<br>69,000 | 18,900<br>90,000<br>1,80,000 | 30,000<br>1,40,000<br>2,80,000 |

## "TAMIL ARASAN PORKUVIYAL" SCHEME

| | Rs. | 15 Years |
|---|---|---|
| CASH CERTIFICATE | 7,500<br>9,000 | 1,30,000<br>1,60,000 |

## "SENTAMIL SELVAKUVIYAL" SCHEME

| Rs. | 21 Years |
|---|---|
| 500<br>250 | 40,000<br>20,000 |

## மங்கையர் திருமண திட்டம்

மாதம் ரூ. 100/- வீதம் 60 மாதங்கள் மட்டும் செலுத்தி 20ம் ஆண்டு முடிவில் ரூ. 1,50,000/- பெறலாம்.

## கடன்

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ. 325 வழங்கப்படும். சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்.

வட்டி வீதம் ரூ. 1.85

## SAVINGS DEPOSIT INTEREST RATE 10.5% P.A

கொடுக்கல் வாங்கல் ரூ.1/- செலுத்தி பங்குதாரர்களாகிறவர்களிடம் மட்டும்

**WE WORK ALL DAYS**

Working Hours : Week Days: 8.30 a.m. to 5.00 p.m. Sunday: 8.30 a.m. to 1.00 p.m.

| V. KRISHNAMOORTHY B.A., B.L., | A. THIAGARAJAN M.A., | R.SUBRAMANIAN B.SC., B.L., |
|---|---|---|
| Secretary | Executive Director | President |

# திருடர்களாலும் திறக்க முடியாத லாக்கர்கள்

## (சவால்விடும் பூட்டுக்கள்)



உங்கள் பணம் நகைகளைப் பாதுகாக்க பீரோவின் விலைக்கே.



**STRONG ROOM DOORS**

**திருடர்களால் உடைக்கவோ, மாற்று சாவி போட்டு திறக்கவோ முடியாது.**

**45 வருடம் அனுபவம் உள்ளவர்களால் தயாரிக்கப்படும் மாஸ்டர் சாவிகளின் தொழில் நுட்பம்.**

**குறைந்த விலை. நிறைந்த பாதுகாப்பு.**

| | Normal Model | Super Model | Fire Resisting Model |
|---|---|---|---|
| UMA 24 (600 x 450 x 450 mm) *(மினி மாடல் இரும்பு பெட்டிகள்)* | ரூ. 6,650 | ரூ. 8,450 | — |
| UMA 30 (750 x 600 x 600 mm) *(மீடியம் மாடல் இரும்பு பெட்டிகள்)* | ரூ. 9,950 | ரூ.11,850 | ரூ.15,450 |
| UMA 36 (900 x 675 x 600 mm) *(பிலினல் மாடல் இரும்பு பெட்டிகள்)* | ரூ.13,950 | ரூ.16,500 | ரூ.19,850 |
| UMA 48 (1200 x 750 x 600 mm) *(பிலினல் மாடல் இரும்பு பெட்டிகள்)* | ரூ.17,950 | ரூ.20,850 | ரூ.26,750 |
| UMA 14 (225 x 350 x 200 mm) சுவரில் பதிக்கும் வால்காஃபர் | | ரூ.1,950 to 4,500 | |

வங்கிகள், நிதிநிறுவனங்கள், நகைக் கடைகள், பெர்மநன்ட் மற்றும் பெனிபிட் பண்டுகளுக்கு தேவையான STRONG ROOM DOORS மிகவும் சிறந்த முறையில் உடனுக் குடன் தயார் செய்து தருகிறோம். மேலும் புதுமையான அமைப்புகளுடன், கூடுதல் பாதுகாப்பு டனும் உங்களுக்கு தேவையான அளவுகளில் ஆர்டரின் பேரில் தயார் செய்து தருகிறோம்.

**UMA & CO** என்ற பெயருக்கு மேற்காணும் விலையில் 50% அட்வான்ஸ் தொகையை A/C PAYEE டிராப்டுடன் ஆர்டர்கள் அனுப்பவும்.

**இலவசம்:** 1995 OCT. 23-ம் தேதி வரை ''கல்கி'' வாசகர்களுக்காக ரூ.850 மதிப்புள்ள மாஸ்டர் சாவிகள் பொருத்திக் கொடுக்கிறோம். நீங்கள் பூட்டிய சாவிகள் தொலைந்து விட்டால் கூட உங்கள் மாஸ்டர் சாவிகள் உதவும். தொலைந்த சாவிகளை பிறர் உபயோகிக்க முடியாது.

**UMA & CO**

274, Lingi Chetty Street, Madras-600 001 Phone:5220272 Fax:91-44-5225577

# பரமக்குடியிலிருந்து தலைமைச் செயலகத்தை இயக்கியவர்!

## சி.வி.நரசிம்மன்

வறட்சிக்குப் பெயர்போன ராமநாதபுரம் மாவட்டத்தில் அந்த நவம்பர் மாதக் கடைசியில் அடித்த மழையை வர்ணிக்க வார்த்தை கிடையாது. மாவட்டத்தின் சராசரி வருட மழை அளவு 23 அங்குலம் என்றால், அந்த இரண்டு நாட்களில் மட்டும் பெய்த மழை 23 அங்குலத்தைத் தாண்டி விட்டது!

கிராமங்கள் பல நீரில் மூழ்கி விட, உயிர்ச் சேதமும் பொருட்சேதமும் ஏராளம்! மாவட்டம் முழுவதிலும் ஆங்காங்கே பாதைகள், பாலங்கள் உடைபட, மின்சாரம் தொலைந்து, தொலைத் தொடர்பு வழிகள் யாவும் தடைப்பட்டு, தலைமையகமான மதுரையிலிருந்து, கிராமங்களைத் தொடர்பு கொள்ளவே வழி இல்லாது போயிற்று.

நல்லவேளை. சில கிராமத்து மக்கள். மார்பளவு நீரில் நடந்து வந்து, வெள்ள நிலைமை பற்றித் தகவல் தந்தார்களோ. பிழைத்தோம்!

உடனே, ரிஸர்வ் போலீஸ் படை கிராமங்களுக்கு அனுப்பப்பட்டது. அரிசி, உப்பு. மண்ணெண்ணெய் உள்ளிட்ட அத்தியாவசியப் பொருட்களின் மூட்டையைத் தலையில் சுமந்து, நீரில் நடந்தே சென்று கிராமங்களை அடைந்தது, போலீஸ் படை.

மிகவும் பாதிக்கப்பட்டு விட்ட ராமநாதபுரம், திருப்பத்தூர், சிவகங்கைப் பகுதி கிராமங்களிலிருந்து போலீஸ் படை, வயர்லெஸ் மூலம், "வந்து சேர்ந்து விட்டோம்" என்று தகவல் சொன்னதும்தான் எங்களுக்கு மூச்சே விட முடிந்தது!

உடனே தீவிர நடவடிக்கைகளைத் தொடங்கினோம். வெள்ள விவரம் பற்றி சென்னைக்குத் தகவல் அனுப்பப்பட்டதுதான் தாமதம், முதல்வர் காமராஜர் உடனே கிளம்பி வந்து விட்டார்! கூடவே, ரெவின்யு போர்ட் மெம்பர்களாயிருந்த இரண்டு மூத்த ஐ.சி.எஸ். அதிகாரிகளான எம்.வி. சுப்ரமணியனையும், எஸ். வெங்கடேசுவரனையும் அழைத்து வந்தார்.

பரமக்குடியில் முகாம். பகல் முழுக்க வெள்ளம் பாதிக்கப்பட்ட பகுதிகளைச் சுற்றிப் பார்ப்பார். இரவுகளில் மற்ற அரசாங்கப் பணிகள். நான்கு நாட்கள் பரமக்குடியில் உட்கார்ந்து கொண்டு, அங்கிருந்தே தலைமைச் செயலகத்தை இயங்கச் செய்த அவரது சாமர்த்தியம், அவரது கூடவே இருந்து கவனித்த என்னை மலைக்கச் செய்தது!

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளைச் சுற்றிப் பார்க்க ஹெலிகாப்டர் உள்ளிட்ட எந்த வாகனத்தையும் அவர் எதிர்பார்க்கவில்லை. வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, மார்பளவு நீரானாலும் நடந்தே போவார். உடன் செல்லும் எங்களுக்குத்தான் சங்கடமாக இருக்குமே தவிர, அவருக்குத் தன்

• காமராஜருடன் சி.வி.என். (தொப்பியில்லாமல்)...



## அருள்வாக்கு

**ந**ல்ல நடத்தையோடு கூடியவர்களாகவும், புராணம் சொல்கிற தத்துவங்களில் ஈடுபாடு உள்ளவர்களாகவும், அதிலே வரும் உத்தம புருஷர்களின் குணங்களில் தோய்ந்தவர்களாகவும் இருக்கப்பட்ட பெரியவர்கள் செய்கிற புராணப் பிரவசனத்தைக் கேட்டால்தான் கேட்பவர்களுக்கும் அதிலுள்ள தர்மங்கள், அதில் வருபவர்களின் ஸத்குணங்கள் இவற்றை கிரஹித்துக் கொள்ள முடியும்.

இதிலே முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, பௌராணிகர்கள் எந்த அளவுக்கு ரஸாபாஸம் உண்டாக்காமல் கதை சொல்கிறார்கள் என்பதுதான். ஏதோ கொஞ்சம் பாலிடிக்ஸ், ஹாஸ்யம், உபகதைகள் வந்தால் பரவாயில்லைதான். ஆனால் இதுகளே கதையை, அதன் தத்வார்த்தத்தை அடித்துக் கொண்டு போகிற மாதிரி செய்து விட்டால் அது ரஸாபாஸம். பகவான் நினைவை உண்டாக்குவதுதான் ரஸம். அதையும் அந்தப் புராணத்தில் சொல்லியிருக்கிற பிரகாரம், அதை விட்டு ரொம்பவும் வெளியே ஓடிவிடாமல், மனஸில் பதிகிற மாதிரி சொல்ல வேண்டும். இதற்கு முக்கியமாக ஸ்வாநுபூதி இருக்க வேண்டும். கதை சொல்கிறவருக்கே ஆஸ்திக்யம், ஆசாரங்கள், தெய்வ பக்தி, தாம் சொல்கிறதில் மனமார்ந்த நம்பிக்கை எல்லாம் இருக்க வேண்டும். அவரே விஷயத்தில் (ஸப்ஜெக்டில்) தோய்ந்தவராக இருந்து விட்டால், வேண்டாத கதைகள், பாலிடிக்ஸில் போவதற்கு அவருக்கே மனசு வராது. ஸினிமா, நாவலுக்குப் பதில் அதே மாதிரி இன்னொரு பொழுது போக்கைப் போலப் புராணப் பிரவசனமும் ஆகிவிட்டால் அதில் ஒரு பிரயோஜனமும் இல்லை.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

● நீங்கள் அளந்தால், அளவைப் பூர்த்தியாக அளவுங்கள்; (இன்னும்) சரியான தராசைக் கொண்டு நிறுத்துக் கொடுங்கள். இதுவே நன்மையுடையதாகவும் முடிவில் (பலன் தருவதில்) அழகானதுமாகும்.

● எதைப் பற்றி உமக்கு(த் தீர்க்க) ஞானமில்லையோ அதை(ச் செய்யத்) தொடர வேண்டாம்; நிச்சயமாக (மறுமையில்) செவிப் புலனும் பார்வையும் இருதயமும் இவை ஒவ்வொன்றுமே (அதனதன் செயல் பற்றி) கேள்வி கேட்கப்படும்.

— திருக்குர்ஆன்

ளைப் பற்றிய கவலையே கிடையாது. சாதாரண நாட்களிலேயே நடந்து போகப் பாதை இல்லாத, உள்ளடங்கிய கிராமங்களுக்கெல்லாம் கூட அந்த வெள்ள சமயத்தில் அவர் சிரமம் பாராமல் நேரில் போய், மக்களைச் சந்தித்து ஆறுதல் சொன்ன விதம், நினைக்க நினைக்க நெகிழ்வூட்டும் விஷயம்.

வெறும் ஆறுதலோடு அவர் நின்று விடவில்லை. அத்தனை கிராமத்து மக்களுக்கும் உணவு, உடை, மருத்துவ வசதிகள் ஒழுங்காகத் தரப்பட வேண்டும் என்று உத்தரவிட்டதோடு, நிவாரணப் பணிகளையும் தாமே நேரில் நின்று மேற்பார்வை செய்தார்!

**ஒ**ரு சுவாரஸ்யமான சம்பவம் நினைவுக்கு வருகிறது.

'நிவாரண நடவடிக்கைகளை எப்படித் தொடங்கி நடத்தலாம்?' என்று தீர்மானிக்க ஒரு சிறிய மீட்டிங் போடப்பட்டது. காவல் துறையும் இதர உயர் அதிகாரிகளும், முக்கிய பிரமுகர்களும் கலந்து கொண்ட அந்தக் கூட்டத்தில் ஒருவர், "மக்களுக்கு முதலில் அரிசி தரலாம். அதுதான் முக்கியம்! மற்றதெல்லாம் பிறகுதான்!" என்று கருத்துத் தெரிவித்தார்.

கேட்டுக் கொண்டிருந்த காமராஜர் உடனே இடைமறித்து, "அரிசியா எதுக்குத் தரணும்? கஞ்சியாவே ஆக்கிக் கொடுத்திருங்க!" என்றார்.

கூட்டம் ஒருகணம் திகைத்தது.

எனக்குப் புரிந்ததும் சிரிப்பு வந்து விட்டது! என்ன ஒரு முன்யோசனை!

அரிசியாகக் கொடுப்பதென்றால், அது போய்ச் சேருவதற்குள் எத்தனை கை மாற வேண்டி இருக்கும்? எத்தனை இடங்களில் 'பதுங்கி' விட வாய்ப்பு இருக்கிறது! மக்களுக்கு

அது முழுசாய் போய்ச் சேருமா என்பதில் சந்தேகம் இருக்கும் பட்சத்தில் திட்டத்தையே மாற்றி விடுவதுதானே புத்திசாலித்தனம்? கடைசியில் காமராஜர் சொன்னபடி கஞ்சியாகத்தான் ஊற்றப்பட்டது!

அந்த வெள்ள சமயத்தில் ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. போலீஸ் துறை என்பது சட்டம் - ஒழுங்குப் பராமரிப்பு, கைது செய்தல், ஊர்வலங்களுக்குக் காவல் என்பதோடல்லாமல் இதுபோன்ற சமூகப் பணிகளிலும் ஈடுபடுவதன் மூலம், மக்களுடன் நெருங்கிப் பழக வாய்ப்புக் கிடைக்கிறது. அதனால் காவல் துறை – பொது மக்கள் உறவு பலப்படுகிறது. இது எத்தனை உன்னதமான விஷயம்! பல பிரச்னைகளுக்கு – சிக்கல்களுக்கு இந்த 'உறவே' தீர்வாக அமைந்து விடுவதை அந்தச் சமயத்தில் நான் நேரில் கண்டு அனுபவித்தேன்.

வெள்ள நிவாரணப் பணியில் போலீஸாரை முழு அளவில் ஈடுபடுத்திய என் பங்கைக் கண்டு, காமராஜர் மனமுவந்து பாராட்டியதை இன்றளவும் பெருமைக்குரியதாகக் கருதுகிறேன்.

**கா**மராஜர் இந்த நாட்டு நலனுக்காக வகுத்து அளித்த திட்டங்களில மிக முக்கியமானது, 1963-ல் அவர் அறிவித்த 'சீனியர்கள் மந்திரி பதவியை விடுத்து, கட்சிப் பணிக்குத் திரும்ப வேண்டும்' என்கிற திட்டம்.

அந்த வகையில், தம் திட்டத்திற்குத் தாமே முன்னோடியாக இருந்து வழிகாட்ட விரும்பி, 1963-ம் வருடம் காந்தி ஜெயந்தி அன்று அவர் பதவி விலகுவதாக அறிவித்திருந்தார். தமிழகத்தின் அடுத்த முதல்வராக பக்தவத்சலம் பொறுப்பேற்க இருந்தார்.

முதல்வராக இருக்கும் போது கடைசி முறையாக ஒருதரம் சொந்த மாவட்டத்திற்கு வந்து போக முடிவு செய்தார் காமராஜர்.

காந்தி ஜெயந்திக்குச் சரியாக ஒரு வாரம் முந்தைய அவரது அந்த சுற்றுப்பயணம் என் வாழ்நாளில் மறக்க முடியாதது!

மாவட்டம் முழுவதும் அவரோடு கூடவே நானும் சுற்றினேன். சரித்திர முக்கியத்துவம் பெறப் போகிற ஒரு நிகழ்ச்சியை அரங்கேற்றப் போகிறவரைக் காண, மக்கள் வெள்ளம் கூட்டம் கூட்டமாய்த் திரண்டிருந்தது.

**எ**ல்லா இடங்களையும் சுற்றி விட்டு, பணி முடிந்த நிறைவில், விருதுநகரிலிருந்த தம் தாயாரைப் பார்க்கப் புறப்பட்டார் காமராஜ்.

கலெக்டர் உள்ளிட்ட உயர் அதிகாரிகளுடன் நானும் கூடப் போனேன்.

காமராஜரின் தாயார் வீட்டிலும் நல்ல கூட்டம். உறவினர்கள் தவிர, பொதுமக்களும் திரண்டிருந்தனர். பேசிக் கொண்டிருந்த போது

ஒரு பெண்மணி உள்ளே நுழைந்தார். அவர் காமராஜரின் உறவினர் போலும்.

உள்ளே வந்தவர், காமராஜரை நெருங்கி, வணங்கி, கையில் ஒரு மனுவைக் கொடுத்தார். கூடவே விஷயத்தையும் சொன்னார் :

"இவ்ளோ பெரிய தலைவரா இருக்கீங்க. எம் பிள்ளைக்கு எங்களா ஒரு வேலை வாங்கித் தரக் கூடாதுங்களா? வயசு வந்த பிள்ளை, வேலை இல்லாமல் கஷ்டப்படுறான்!"

காமராஜர் சற்று யோசித்தார். அவரைச் சற்று ஏற இறங்கப் பார்த்து விட்டு, "சரி, நான் மெட்ராஸ் போனதும் வந்து பாக்கச் சொல்லுங்க."

அந்தப் பெண்மணி முகத்தில் ஒரு சின்ன சந்தோஷ மின்னல். சரி, கிடைத்து விடும்!

காமராஜர் அதோடு விடவில்லை.

"போனவுடனே வந்துட வேணாம். அக்டோபர் ரெண்டு கழிச்சு வந்து பாக்கச் சொல்லுங்க", என்று தீர்மானமாகச் சொன்னார்.

கூட்டம் நெகிழ்ந்து விட்டது! அக்டோபர் இரண்டாம் தேதிதான் அவர் முதல்வர் பதவியை விட்டு விலக இருந்தார்!

தம் பதவி காரணமாக உறவினர்களோ, வேண்டியப்பட்டவர்களோ சலுகை பெறுவதை அவர் மனத்தால் கூட நினைத்தவரல்ல!

அதற்கப்புறம் 1967-ல் நான் சி.பி.ஐ.யில் டி.ஐ.ஜியாகப் பொறுப்பேற்று டெல்லியில் இருந்த போது, மறுபடியும் காமராஜரை சந்தித்தேன்.

முன்னதாகத் தமிழகத்தில் நடந்த பொதுத் தேர்தலில் காங்கிரஸ் தோற்றிருந்தது. தமது சொந்தத் தொகுதியிலேயே மாணவ வேட்பாளர் சீனிவாசனிடம் காமராஜர் தோற்றிருந்தார்!

தோல்விக்கு அவர் யாரையும் குற்றம் சாட்டவில்லை. பொதுக் கூட்டங்கள், பேட்டிகள் யாவற்றையும் கொஞ்ச நாள் தவிர்த்து, மௌன விரதம் மேற்கொண்டு 'சுயபரிசோதனை'யில் ஈடுபட்டிருந்தார்.

பொதுத் தேர்தலில் தோற்றாலும் '68-ல் நாகர்கோவில் தொகுதியிலிருந்து பாராளு மன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட காமராஜர் அப்போது டெல்லி வந்தார்.

நாடு முழுக்க பலமான வதந்தி.-'காமராஜர் மத்திய அமைச்சரவையில் இடம்பெறப் போகிறார்.'

எனக்குக் குறுகுறுப்பு. 'நிஜமாகவே காமராஜர் அமைச்சராகப் போகிறாரா? வதந்தி இத்தனை பலமாக இருக்கிறதே?'

காமராஜரிடமே கேட்டு விடுவதென முடிவு செய்தேன்.

புது தில்லியில் ஒரு எம்.பி. வீட்டில் தங்கியிருந்த அவருடன் டெலிபோனில் பேசி விட்டு, நேரே போய் விட்டேன்.

"வாங்க நரசிம்மன்! நல்லாருக்கீங்களா?"

அதே புன்னகை. அதே அன்பொழுகும் வரவேற்பு. அதே பரிவு.

வேறெதுவும் பேசத் தொடங்குமுன் நான் என் 'உறுத்தலை'க் கேட்டு விட்டேன்.

"ஐயா, பத்திரிகைகளில் இப்படிச் செய்தி வருகிறதே! நீங்கள் நிஜமாகவே மத்திய அமைச்சரவையில் இடம்பெறப் போகிறீர்களா?"

காமராஜர் உரக்கச் சிரித்தார். "ஆ! நமக்கு தமிழ்நாட்டுல நெறைய வேலை இருக்குதுங்களே! கட்சியை கவனிக்க வேணாமா?"

எனக்குப் புரிந்து விட்டது. நிச்சயம் கூப்பிட்டுக் கொடுத்தாலும் இவர் அமைச்சர் பதவியை ஏற்கப் போவதில்லை!

கடைசியில் நடந்ததும் அதுதான்!

அப்பேர்ப்பட்ட ஒரு தன்னலமில்லாத் தலைவருடன் நெருங்கிப் பழக வாய்த்த மிகச் சிலருள் நானும் ஒருவனாக இருந்திருப்பதை நினைக்க நினைக்கப் பெருமிதம் பொங்குகிறது; அக்கால நினைவுகளில் மெய் மறந்து போகிறேன்!

(அடுத்த வாரம்)

---

# Kalki Shopping Page

# ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம் - 8

அழகர் மலை என்று வைணவர் வணங்கும் திருத் தலமே பழமுதிர்சோலை என்று முருகபக்தர்களால் இன்று வணங்கப்படுகிறது! முருகன் திருமாலாக உருமாற்றம் ஆனரா என்பது போன்ற சிக்கல் சிலருக்கு இடியாப்பம். நமக்கு அதில் ஆர்வம் இல்லை.

பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார், பூதத் தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோரால் பாடப் பெற்ற இந்த அழகருக்கு சுந்தரராஜப் பெருமான் என்றும் பெயர். இவர், அபரஞ்சி தங்கத்தாலான அழகர்!

இந்த, மாலிருஞ்சோலை மலையே பழமுதிர் சோலையா கவும் மகிழப்படுகிறது என்பது உண்மைதான்.



சிலப்பதிகாரம் இங்குள்ள பொய்கை யைப் புண்ணிய சரவணம் என்கிறது! சர வணம் முருகனுடன் தொடர்புடையது என்பதால் இம்மலை முருக வழிபாட்டுக் கும் உரியதாகிறது. சரவணம் என்பது நாணலையே குறிக்கும் என்று அறுவை சிகிச்சை நடத்திப் பார்ப்பது நயத்தகு நாகரிகம் ஆகாது!

மேலும் 'பாசத்தால் விலைகட்டிய பொட்டிகள்' என்று தொடங்கும் திருப்புகழில் பழமுதிர்சோலை மதுரைக்கு அண்மையில் உள்ளது என்னும் குறிப்பு தோன்ற "பிட்டமுதுக்கு அடி படுவானொடு.... நெருக்கிய ஆதிமலை" என்ற வரிகள் உள்ளன. பரிபாடல் என்ற "பழந்தமிழ் (சங்க) இலக்கியம் ''சிலம்பாற ணிந்த சீர்கெழு திருவிற் சோலையொடு தொடர் மொழி மாவிருங் குன்றம்'' என்று ஒலி எழுப்பி ஓடும் சிலம் பாறு வர்ணிக்கப்படுகிறது. ''வாரணமுங்கிழிந்து'' என்று தொடங்கும் திருப்புகழில் அருணகிரிநாதர் "ஆயிர முகங்கள் கொண்ட நூபுரமிரங்கு கங்கை" என்று சிலம்பாறு பற்றிப் பாடு கிறார். அந்தத் திருப்புகழ் 'சோலைமலை வந்து கந்தபெரு மாளே' என்று நிறைவுறுகிறது. எனவே ஒரே தலம் இருபெரும் வழிபாட்டின் இருப்பிடம் என்று எண்ண இடம் இருக்கிறது.

பழமுதிர் சோலையின் சிறப்பே இந்தச் சிலம்பாறு போலும். ஏனெனில் இழை இழை யாகப் பிரிந்து ஆயிரம் முகங்க ளோடு பாயும் அழகை அருணை முனிவர் அநுபவித்த மாதிரி, ஆதி யிலேயே நக்கீரர் அனுபவித்தார். திருமுருகாற்றுப் படை பாட வந்த போது, ஐந்து படை வீடுகளைப் பாடிய பிறகு, பழமுதிர் சோலை யைப் பாடும் போது அருவி வழியும் அழகைப் பலவரிகளில் பாடி மகிழ்வுற்றார். இழும்



# இயற்கை நடத்தும் இறை வழிபாடு!

என்ற ஒலியழகுடன் அருவி இழியும் பழமுதிர்சோலை என்ற பொருளில் 'இழும் என இழிதரும் அருவிப் பழமுதிர் சோலை மலைகிழவோனே' என்று பாடி மகிழ்ந்தார்.

திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் நெஞ்சில் பெரிய இடம்பிடித்த படை வீடு இது என்பதால் அரிய படம் பிடித்துக் கண்முன் நிறுத்தி விட்டார். இயற்கை அழகும் பொலிவும் மிக்க இடம் எல்லாம் முருகன் உறைவிடம் என்று முரசறைந்து விட்டு முருகனை யார் யார் எவ்விதம் போற்றுவர் என்று பாடி முடித்து, அவனை எப்படி எப்படி துதிக்க வேண்டும் என்று துதித்து மகிழ்ந்து, அந்த முருகன் பழமுதிர் சோலை மலைக்குரிய தலைவன் என்று பாடி மகிழ்ந்தார்.

முருகன் குடியிருக்கும் பழமுதிர்சோலை மலை மீதுள்ள அருவி, பல்வேறு துணிக் கொடிகள் அசைவது போல் காட்சி தரும். அகில் கட்டைகளைச் சுமந்து வரும். சந்தன மரங்களை வேருடன் சாய்த்து உருட்டும். பூக்களைச் சுமந்த சிறு மூங்கில் கொம்புகள் அற்று வீழும்படி வேரைப் பிளக்கும். இளம் சூரியன் போல் சிவந்து உச்சியில் தொங்கும் குளிர் மணம் மிக்க தேன் அடைகளைச் சிதைத்து நீரில் தேன் சுமக்கும்.

தேன் போதுமா? பலாச்சுளை தேவை என்பதால் வேர்ப் பலாச் சுளை பிளந்துதான் சுமக்கும். மலை உச்சியில் உள்ள மலர்கள் மணம் பரப்பி அருவியில் உதிரும். கருங் குரங்குகளும் கரியமுகமுடைய முசுக் கலைகளும் குளிரால் நடுங்கி வாடும். புள்ளிகள் அமைந்த மத்தகத்தை உடைய பெரிய பெண் யானைகள் நடுங்கும்படியும் குளிர்நீரை அருவி தெளிக்கும். முதிர்ந்த காரணத்தால் முத்துக்கள் விளைந்த தந்தங்களை உடைய ஆண் யானைகள் ஆங்காங்கே மாண்டு போவதால் அந்தத் தந்தங்களை அருவி ஏந்தி வரும். பொன்னும் மணியும் மிதந்து வர அங்கும் இங்கும் குதிக்கும். பொன் பொடியை வீசும். வாழையை வேருடன் சாய்த்து, தென்னையின் குலைகளை அற்று விழச் செய்து, கரிய மிளகுக் கொடியின் கொத்துக்களை அறுத்து எடுக்கும்.

அருவியின் ஆர்ப்பொலி கண்டு பீலி (இறகு) சுமந்த முதுகையும் இளமை பொருந்திய நடையையும் உடைய மயில்கள் அஞ்சும். வலிமை மிகுந்த காட்டுப் பெட்டைக் கோழிகள் ஓடி ஒளியும். கரிய பனைமரத்தின் சிராம்பு போன்ற கருமயிர் அடர்ந்த உடம்பையும் வளைந்த அடிகள் உடைய கரடி, கல் பெயர்ந்த குகையுள் சென்று சேரும். கரிய கொம்புகளை உடைய காட்டுப் பசுவின் துணையாகிய காளைகள் பேர் ஒலி எடுத்து முழங்கும். அதுபோது இழும் எனும் ஓசையுடன் மலை உச்சியில் இருந்து அருவி விழும் பழமுதிர் சோலைக்கு உரிய தலைவன் முருகன் என்று பழமுதிர் சோலையைப் படம் பிடிக்கிறார் நக்கீரர், திருமுருகாற்றுப் படையில்,

இதுவரை நாம் தரிசித்த தலங்களுக்கும் பழமுதிர் சோலைக்கும் நிறையவே வேறுபாடு உண்டு. கற்கோவில், கம்பீரமான கோபுரம், கலை மிகுந்த சிற்பச் செதுக்கல் என்பது பற்றி இங்கே பேச்சில்லை. குளிர் அருவித் தூறலில் அச்ச மணம் கமழும் மலை உச்சி அநுபவமே பழமுதிர் சோலை தரிசன சுகம். இயற்கை அழகு அனுபவமே முருக வழிபாடு. வேத மந்திர ஒலியை விழுங்கும் விழுமிய பெருமை அருவி உரைக்கும் ஓம் என்ற ஒலித் தீபத்துக்கு உண்டு. வீட்டில் ஜபம் செய்வதை விட இணற்றங்கரையில் செய்வது பலமடங்கு பலன். இணற்றங்கரையை விட குளக்கரை உயர்வு. குளக்கரையை விட ஆற்றங்கரை... ஆற்றங்கரையை விட ஆயிரம் மடங்கு பலன் தருவது அருவிக்கரை ஜபம். அந்த அருவியே ஓம் என ஜபிக்கும் அழகு மலை அந்த அழகர்மலை!

நீ தோட்டத்தில் இருக்கும் போது கடவுளுக்கு அண்மையில் இருக்கிறாய் என்பது ஆங்கிலப் பழமொழி. அப்படியானால் மலையில் இருக்கும் போது கடவுள் கூடவே இருக்கிறோம் என்பதே பொருத்தமாக இருக்கும்! இந்தச் சோலை மலையில் பழம் முதிருகிறது எனவே பழமுதிர்சோலை. பழம் உதிருகிறது எனவே பழம் உதிர்சோலை! பழுத்த பழம் மரத்தில் பற்று வைப்பதில்லை. உதிர்ந்து விடுகிறது. பழுத்த ஆன்மாவும் அப்படியே! வாழ்வில் பற்றை விட்டு பரம்பொருள் அடியில் விழுகிறது. இயல்பான வளர்ச்சியை, இயற்கையான முதிர்ச்சியை விளக்குவதே பழமுதிர்சோலை வழங்கும் விளக்கம்.

வேதம் உபநிடதம் விளைந்த இடம் ஆரண்யம். பெரும்பாலும் மலைக்காடு! மனம் அமைதியாகி உண்மை உணர உகந்த பூமி அது. அந்த அநுபவம் விளையும் இயற்கை அழகு மிகுந்த பழமுதிர் சோலையையே சங்க காலத்து நக்கீரர் விரும்பிப் பாடினார். திருமுருகாற்றுப் படையிலேயே அதிகம்

**சுகி சிவம்**

வர்ணிக்கப்பட்ட அழகுத்தலம் இது.

பட்சிகளும் பறவைகளும் துள்ளிப் பறக்கும் பழமுதிர் சோலை மண்ணை மிதித்ததும் அருணகிரிநாதரும் பறக்கத் தொடங்கினார்.

'தனதன தான
தனதன தான
தனதன தான
தனதன தான'

என்ற தாளம் தட்டிக் கொண்டு முருகனைப் பாடினார்.

*''அகரமும் ஆகி அதிபனும் ஆகி*
*அதிகமும் ஆகி அகமாகி*
*அயன் என ஆகி அரியென ஆகி*
*அரன்என ஆகி அவர் மேலாய்''*

என்றார். எல்லா ஒலியும் அகரத்தில் தொடங்குகிறது. சகல ஒலிகளிலும் அகரம் உள்ளிருக்கிறது. 'அகர முதல எழுத்தெல்லாம்' என்பது தமிழ் மறை. தொடக்கம் இறைவன். எனவே 'அகரமும் ஆகி' என்றார். ஆனால் எது தொடக்கமோ அதுவே எல்லாம் உடைய அதிபனாக (தலைவனாக) இருக்கிறது. எனவே அதிபனும் ஆகி என்றார். அத்தோடு அவற்றை விஞ்சி நிற்பதால் அப்பொருளை 'அதிகமும் ஆகி' என்றார். எல்லாவற்றின் உள்ளும் உயிருக்கு உயிராவதால் 'அகமாகி' என்றார். அப்பொருள் பிரமனாய், அரியாய், சிவனாய் ஆனதோடு அவர்கட்கெல்லாம் மேலாக ஆனது என்று விளக்கினார்.

அந்தப் பொருளை, 'இகரமும் ஆகி எவைகளும் ஆகி இனிமையும் ஆகி வருவோனே இருநிலம் மீதில் எளியனும் வாழ எனது முன் ஓடி வர வேண்டும்' என்று வேண்டினார்.

இறைவன் இங்குள்ளதாகி, இங்குள்ள எல்லாமாக ஆகி, இனிமையாகவும் ஆகி வருகிறானாம். அப் பரம்பொருள் எளியவனாகிய நானும் வாழும்படி இப் பெரிய நிலத்தில் வர வேணும் என்றார். அதுவும் ஓடி வரவேணும் என்றார். கருணை காரணமாக வா. கருணை மிகுதி காரணமாக ஓடி வா என்று உத்தர விட்டார்.

யாக (மகம்) பதியாகி விளங்கும் வலாசுரனை வென்ற வலாரியாகிய இந்திரன் தன் தேவ லோகத்தை மீட்டுத் தந்தமையால் முருகனைப் பார்க்கும்போதெல்லாம் மகிழ்கிறான் என்றும், கதிர்காமத்தில் அந்திமான் என்ற வேடனாகப் பிறந்த பிரமன் பிப்பிலாத முனிவரைக் கொல்லப் போக அவர் கருணையால் முருகனைப் பூசித்து அருள்பெற்றான் என்றும் பொருள்படும்படி

*''மகபதி யாகிய மருவும் வலாரி மகிழ்களி*
*கூரும் வடிவோனே*
*வனமுறை வேடன் அருளிய பூசை*
*மகிழ்கதிர் காமம் உடையோனே''*

என்று பாடினார்.

அடுத்தவரிகளில் பழமுதிர் சோலையில் மயில்கள் ஆடும் அழகை வர்ணிக்கிறார். ஒலி வடிவங்களில் உலாவும் அழகை வர்ணவடிவங்களில் கொண்டு வருவது அவ்வளவு சுலபம் அல்ல. ஒலியை எழுதிக் காட்டுவது அவ்வளவு சுலபம் அல்ல! ஆடும் மயில் தனது இறகுகளை விரிப்பது என்பதே அழகு. இறகே அழகு... விரிப்பதோ மிக மிக அழகு... அப்படி விரிக்கும் போது இறகுகள் உரசி ஒருவிதமான ஒலி வரும். பட்டுப் புடைவை சரசரக்கிற மாதிரி... இதை எப்படி எழுதுவது... ஒலிநயம் மிகுந்த சந்தப் பாட்டுக்காரர் அருணகிரிநாதர் எந்தக் கஷ்டமும் இல்லாமல் எழுதி முடித்தார்.

மயில் இறகு விரியும் போது 'செகு செகு' என்று ஒலி வருவதைப் பாட்டு முறை மாறாது பாடி முடித்தார். காலை எடுத்து எடுத்து வைப்பதை 'தகுதிமி தோதி திமியென ஆடும்'' என்றார். இறகு விரியும் ஒலியும் காலை மாற்றி வைக்கும் அழகும் விளக்கும் திருப்புகழ் வரிகள் பாடிப் பாடி இன்புறத்தக்கன :

*செககண சேகு தகுதிமி தோதி திமியென*
*ஆடும் மயிலோனே*
*திருமலவான பழமுதிர் சோலை*
*மலைமிசை மேவு பெருமாளே!*

(தொடரும்)

## அரசு கண்ணில் மண்ணைத் தூவிய அதிகாரிகள்!

டெலிவிஷன் மற்றும் கம்ப்யூட்டர்கள் தயாரிக்கும் நிறுவனம் 'கெல்ட்ரான்.' இது கேரள அரசுக்குச் சொந்தமானது. இந்த அரசுத்துறை நிறுவனமும் நஷ்டத்தில்தான் இயங்கிக் கொண்டிருந்தது. இந்த நிலையில் இதன் மானேஜிங் டைரக்டரும் ஜெனரல் மானேஜரும் ஒரு வெளிநாட்டுப் பயணத்துக்கான திட்டத்தைத் தீட்டினார்கள்.

நிறுவனத்துக்குத் தேவையான இயந்திரங்களை வாங்குவதற்கான வெளிநாட்டுப் பயணம் என்பதால் அரசும் அனுமதி கொடுத்து விட்டது. இதையறிந்த நிறுவனத்தின் தொழிற் சங்கங்கள் சும்மா இருக்குமா? ''ஏற்கெனவே இந்த நிறுவனத்துக்கு ஏற்பட்டுவரும் நஷ்டத்தை இவர்கள் வெளிநாட்டில் போய் வாங்கும் இயந்திரங்களால் தடுத்து நிறுத்திவிட முடியாது! அதோடு இவர்கள் வாங்கப் போவதாகச் சொல்லும் இயந்திரங்களை இந்தியாவிலேயே வாங்கலாம்!'' என்று முதல்வருக்கும் தொழில் துறை அமைச்சருக்கும் மனு கொடுத்தார்கள். அரசும் அவர்களின் வெளிநாட்டுப் பயணத்துக்கு வழங்கிய அனுமதியை ரத்து செய்து விட்டது!

ஆனாலும் அந்த இருவரும் விடுவதாயில்லை. எப்படியோ அந்நியச் செலாவணியையெல்லாம் ஏற்பாடு செய்து கொண்டு யாருக்கும் தெரியாமல் விமானமேறி வெளிநாட்டுக்குப் பறந்து போய்விட்டார்கள். இதையறிந்த தொழிற் சங்கங்களும் அரசும் அவர்களின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. ஆனால், வரவேற்புக் கொடுக்க அல்ல!

திருவனந்தபுரத்திலிருந்து : எஸ்.எஸ். மணி

# Kalki Shopping Page

## RANI SAREES

**NOW SEPECIAL QUALITY AVAILABLE**

## BENGAL COTTON SAREES

BEST QUALITY ATTRACTIVE DESIGNS AND COLOURS
10% DISCOUNT ON BENGAL COTTON ONLY.

AVAILABLE ON WHOLE SALE ALSO

**MADURAI TEXTILES**
2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZZAR,
MADRAS - 17.
(Nearer to Vegetable Market)

## WE WELCOME YOU TO THE WORLD OF KARISHMA CHURIDARS AND COTTON SAREES

OUR PRODUCTS

1) Karishma Churidars
2) Karishma Sarees
3) Andhra Pochham Palli Cotton Sarees
4) Belgaum Polyster (Saradha) Sarees
5) Seiko Sarees
6) Banaras cotton sarees
7) Beekay Sarees (New Product)

## AALURI SAREES

*The Shop exclusively for Ladies*

(DEALER OF KARISHMA CHURIDARS & SAREES)
WHOLESALE & RETAIL
4/24, R.K. MUTT ROAD, LUZ BAZAAR,
MYLAPORE, MADRAS - 600 004.
NEXT TO SRINIVAS SILK
PHONE : 4935791

WE WELCOME CITIBANK CARDS

## காஸ் ஸ்டவ் பயன்படுத்துவோர் கவனத்திற்கு!



காஸ் ஸ்டவ்
பிரச்சினையா?
எங்களை
உடனே அணுகவும்.



415117 (அடையார்)
4820494 (மாம்பலம்)

எல்லா வகையான காஸ் அடுப்புகளும் ரிப்பேர், ஸ்ப்ரே பெயிண்டிங், குரோமியம் பிளேட்டிங், உதிரிபாகங்கள், பெரிய காஸ் அடுப்புகள் வாடகைக்கு பெற,

## சிவா

காஸ் ஸ்டவ் மெக்கானிக் & சர்வீஸ்

7/8, கஸ்தூரிபா நகர், 3 வது குறுக்குத் தெரு, அடையார், சென்னை 20.
39, எல்லையம்மன் கோவில் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை 33. (குளம் எதிரில்)

ரிப்பேர் செய்ய தங்கள் ஸ்டவ்வை கொடுக்கும்போது உடனடி உபயோகத்திற்கு மாற்று காஸ் ஸ்டவ்வும் தருகிறோம்.

# வருகிற 27-ம் தேதியன்று அனைவரும் எதிர்பார்க்கும் அதிரடியான அரசியல் அறிவிப்பை ரஜினி வெளியிடுவாரா?

ஜூலை 14-ஆம் தேதி தமிழகத்தில் மையம் கொண்ட புயல் இன்னமும் கரையைக் கடக்கவில்லை. புரியவில்லையா? அன்றுதான் 'பாட்ஷா' விழாவில் ரஜினிகாந்த் 'வெடிகுண்டு கலாசாரம்' பற்றிப் பேசினார். அதன் பிறகு ரஜினியையும், ஆர்.எம். வீரப்பனையும் தாக்கி அ.தி.மு.க. தரப்பிலிருந்து வந்த அறிக்கைகள், ஆர்.எம்.வீ. இலாகா மாற்றம், கடைசியில் நீக்கம் என்று வேக வேகமான நிகழ்ச்சிகள், எல்லாமாகச் சேர்ந்து ரஜினியை புயலின் மையக் கண்ணாக மாற்றி இருக்கின்றன. 'மாற்றம் வருவது காலத்தின் கட்டாயம்' ஏன்று பிறந்த நாளின் போது ஒரு கூட்டத்தில் பேசினார் ஆர்.எம்.வீ.

மாற்றம் வருகிறதோ இல்லையோ, ஒரு முடிவெடுக்க வேண்டிய கட்டத்தில் ரஜினி இருக்கிறார் என்பது மட்டும் நிதர்சனம். சிலர் முடிவெடுப்பதை தள்ளிப் போடுவார்கள்; தயக்கம் காட்டுவார்கள்; நழுவி ஓடுவார்கள்; சூழ்நிலைக்கேற்ப அந்த செயல்கள் சாணக்கியம், ராஜ



ன்றெல்லாம் வர்ணிக்கப்படும். ஆனால் இப் ஜினி அப்படியெல்லாம் செய்ய முடியாது. சொல்லப் போனால், முடிவெடுத்தே தீர மூலைக்கு அவர் தள்ளப்பட்டிருக்கிறார். ஜினி பற்றிய பேச்சுத்தான் எங்கும்! மனிதர் டிவெடுப்பார்? 'அதை 27-ம் தேதி சொல் ன்று அவரே அறிவித்திருக்கிறார்.

யாக ரஜினி அரசியலில் குதிப்பாரா? இன் சியலில் நிலவும் சூதுவாதுகளை சமாளிக்க முடியுமா? தம் மீதும் தெய்வத்தின் மீதும் வைத்திருப்பவர் ரஜினி!" என்கிறார் திரைப் குனர் நடராஜ். இவர் ரஜினியின் அத்யந்த டிப்புக் கல்லூரியில் ஒன்றாகப் படித்தவர். 23 வருடங்களாகப் பார்த்து வருகிறேன். ப்பர் ஸ்டாராக உயர்ந்து விட்டார். ஆனால் ந்து இன்று வரை பழகும் தன்மையில் சிறி றமில்லை!" என்று சொல்லி பூரித்துப் போகி ராஜ்.



# அரசியல் ரஜினி!

## —ஓர் அலசல்!

சின்ன வயதில் ராமகிருஷ்ணா மிஷனில் படித்த தாலோ என்னவோ, ரஜினியிடம் ஆன்மீக உணர்வு தொக்கி நிற்கிறது. ஏகாந்தத்தை விரும்பும் மனநிலை. அதனால்தானோ என்னவோ வருடத்தில் கணிசமான நாட்கள் இமயமலைச் சாரலில் தனியே சுற்றுகிறார் ரஜினி. நெருங்கிய நண்பர்கள் வட்டாரத்தில் ரஜினி நல்ல நேயர் (அதாவது listener).

ரஜினியைச் சுற்றி உள்ள அவரது உதவியாளர்கள் பெரும்பாலும் காவி வேட்டி, தாடி முகத்துடன்தான் காட்சியளிக்கிறார்கள். பல விஷயங்களில், நாட்டு நடப்பு உட்பட, காதில் வாங்கிக் கொள்ளும் ரஜினி, எந்தக் கருத்தையும் உடனே வெளியிட்டு விடுவதில்லை யாம். "வாழ்க்கையின் முக்கியமான கட்டங்களில் அவர் எடுத்த முடிவுகள் அவரது சொந்த முடிவுகள்தாம்!" என்கிறார் நெருங்கிய நண்பர் ஒருவர். ஆனால் பலர் கருத்துக்களைக் கேட்கத் தயங்குவதில்லையாம்.

சிறிய வயதில் பட்ட காயங்களின் வடு இன்னமும் மாறாமல் இருப்பதால்தான், பழைய விஷயங்கள், பழைய நண்பர்கள் என்று ரஜினி மறக்காமலிருக்கிறார். அநாயவசியமாக யாரையும் புண்படுத்தாமல் இருப்பது, பெரியவர்களிடம் மரியாதையோடு பழகுவது, இவை யெல்லாம் வாழ்க்கையின் ஒரு கட்டத்தில் ரஜினி யோடு ஒட்டிக் கொண்டவை. இரக்கப்பட்டுத் தருமம் செய்வதும் வலது கை கொடுப்பதை இடது கை அறியா வண்ணம்தான். இது அவரது நெருங்கிய சில சகாக் களுக்கே தெரியாது.

"அவருடன் நடிப்புப் பள்ளியில் படித்தவர்களுக்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டுமென்பதற்காகவே 'வள்ளி' படத்தை எடுத்தாரே! அதை மறக்க முடியுமா?" என் கிறார் நடராஜ். "அரசியலுக்கு வருவது, வராதது அவ

ரது முடிவு; ஆனால் எங்களைப் போன்ற வர்களுக்கு அவர் வந்தாலும் ஓ.கே. வராவிட்டாலும் ஓ.கே.தான்!" என்கிறார்.

**எம்.**ஜி.ஆரைத் தவிர, புதிய கட்சி துவங்கிய பல நடிகர்கள் தட்டுத் தடுமாறிப் பள்ளத்தில் விழுந்திருப்பது ரஜினிக்குத் தெரியாதா என்ன? ஆனால் இதிலும் ஒரு சின்ன வித்தியாசம் இருக்கிறது. "பெரும்பாலான நடிகர்கள், தாங்கள் இருந்த கட்சியிலிருந்து விலகியோ அல்லது விலக்கப்பட்டோ, தனிக் கட்சி கண்டார்கள். ரஜினி அப்படியல்ல. எழுமிச்சை புத்துணர்ச்சியோடு வருகிறார்!" என்கிறார்கள் ரஜினி ரசிகர்கள்.

"தலைவர் அரசியலுக்கு வரணும்னுதான் ரசிகர்கள் விரும்புவார்கள்" என்று சொல்கிறார், ரஜினி ரசிகர் மன்றத் தலைவர் சத்திய நாராயணா. மொத்தம் 15,000 மன்றங்கள். ஒவ்வொரு மன்றத்திலும் குறைந்தபட்சம் 25 உறுப்பினர்கள் இருக்கிறார்களாம். "அடிப்படையாகவே எங்களுடையது நற்பணி மன்றம்தான்" என்கிறார் சத்தி.

சமீபத்தில் வீரப்பனுக்கு 'பொக்கே' கொடுக்க வந்தபோது 'வருங்கால முதல்வரின் போர்ப் படைத் தளபதியே!' என்று கோஷமிட்டார்கள் ரசிகர்கள்.

"இதெல்லாம் உற்சாக மிகுதியால் வரும் கோஷங்கள். அலட்சியப்படுத்த வேண்டியவை" என்கிறார் சத்தி. ரஜினியின் முடிவு தெரியாமல், பல கேள்விகளுக்குப் பதில் சொல்வது சரியல்ல என்பது அவரது வாதம்.

**த**னிமையையும், அமைதியையும் விரும்பும் ரஜினி ஓர் அரசியல் தலைவராக தன்னை மாற்றிக் கொள்வாரா? ஏனென்றால், அரசியல் தலைவர்கள் முதலில் பலிகொடுப்பது privacyயைத்தான். ஆனால் ரஜினியைப் பொறுத்தமட்டில், தனிக்கட்சி துவங்கி, அரசியலில் பிரவேசிக்கிறாரோ இல்லையோ, ஆர்.எம்.வீ. அரசியலில் நிலைத்து, ஏதாவது செய்தாக வேண்டும் என்று அவர் விரும்புகிறாராம். தமது 'வெடிகுண்டு'ப் பேச்சில் ஆர்.எம்.வீ. பாதிக்கப்பட்டிருப்பது மனத்தைப் புண்படுத்தியிருக்கிறதாம். ஆர்.எம்.வீயும், அவர் பங்குக்குத் தமது ஐம்பது வருட கால அரசியல் அனுபவத்தின் பின்னணியில், ரஜினிக்கு பக்கபலமாகச் செயல்படத் தயாராக இருக்கிறார்.

ஆர்வக் கோளாறு காரணமாக வெள்ளை, சிவப்பு, நீலக்கலர் கொண்ட கொடியை ரசிகர்கள் வைத்திருந்தாலும் இதற்கெல்லாம் ரஜினி ஒப்புதல் தரவில்லையாம். 'தனிக்கட்சி' என்பது சாதாரண விவகாரமல்ல என்பது ரஜினிக்கு புரியாததல்ல. மக்கள் செல்வாக்கு ஒருபுறம் இருந்தாலும், பணபலம் வேண்டும் என்பது அடிப்படை விஷயம். இதுவரை பாடுபட்டு உழைத்துச் சம்பாதித்ததைப் பிரியும் மனநிலைக்கு தயாராக வேண்டும். இவைகளையெல்லாம் கணக்கில் கொண்டுதான் தம் முடிவைத் தள்ளிப் போடுகிறார் ரஜினி.

**ர**ஜினி என்ன முடிவெடுக்கப் போகிறார் என்பது மர்மமாக இருந்தாலும் - ஒரு தனி அமைப்பாக இருந்தாலும் சரி, கட்சியாக இருந்தாலும் சரி, அனைத்து எம்.ஜி.ஆர். விசுவாசிகளும் ஓரணியில் திரள வேண்டும் என்று விரும்புகிறாராம். அதற்கான முயற்சிகளில் சில எம்.ஜி.ஆர். அன்பர்கள் இறங்கியிருக்கிறார்கள்.

இதற்கிடையில் ரஜினி என்கிற புயல் தம்மைத் தாக்க வருவதற்கு முன்னரே சில தற்காப்பு நடவடிக்கைகளுக்கும் திட்டம் போட்டுக் கொண்டிருக்கிறார் ஜெ. 'புலியை குகையிலேயே சந்திப்பேன்' என்கிற மனோபாவத்தில் செயல்பட இருக்கிறாராம் ஜெ. அடுத்த சில தினங்களில் அவரிடமிருந்தும் அதிர்ச்சி தரத்தக்க அரசியல் முடிவுகளை எதிர்பார்க்கலாம்.

**இ**ப்போதெல்லாம் போயஸ் தோட்டத்தின் நுழைவாயிலுள்ள போலீஸாருக்கு ஏக தலைவலி. ரஜினி ஊரிலிருக்கும்போது சாரி சாரியாக வரும் அவரது ரசிகர்கள் 'முதல்வர் வீட்டுக்குப் போறோம்!' என்று அதிர்ச்சி அறிவிப்பைக் கொடுத்து, பின்னர் 'வருங்கால முதல்வர் வீட்டுக்கு சார்' என்று கிண்டலடித்தபடி செல்கிறார்களாம்! 27-ம் தேதிக்குப் பிறகு அவர்களது கிண்டலில், கொஞ்சம் ஆவேசமும் சேரும்!

**- ப்ரியன்**

அட்டை வண்ணப்படமும், படமும் : **யோகா**



**"உங்க தலைவர் காந்தி பக்தர்னு எப்படிச் சொல்றீங்க?"**

**"அவர் பிறந்த தின விழாவில் அவருக்கு விழுந்த மாலைகள் அன்பளிப்புகள் எல்லாமே ஐநூறு ரூபாய் கோட்டுதான்!"**

**- கானா. கணேசன்**



















KADALANGUDI
PUBLICATIONS




# இசை உலகின் இளம் தென்றல்கள்!

செப்டம்பர் 9-ம் தேதி. வீரப்பன் பாட்டு; ரஜினி வயலின்; குமரிஅனந்தன் மிருதங்கம்! 'கச்சேரி என்று, எப்போது' என்று அறிவிக்கப்படக் காத்திருந்தவர்கள் ஏமாற்றமே அடைந்தனர். அவர்கள் அதே தி. நகரின் இன்னொரு பக்கம் அமைதியான கிருஷ்ணகான சபை சூழலுக்கு வந்திருந்தால் சிறிதும் ஏமாற்றமளிக்காத மகாராஜபுரம் ராமச்சந்திரனின் கச்சேரியைக் கேட்டு மகிழ்ந்திருக்கலாம்!

இதில் இன்னொரு விசேஷம், அன்று அமரர் கல்கி பிறந்த தினம் என்பதால் அதைக் கொண்டாடும் வகையில், கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை பல டிக்கெட்டுகளை வாங்கி, கர்நாடக இசை அன்பர்களுக்கு இலவசமாக வழங்கி வரவேற்றது. கச்சேரிகளை "ஸ்பான்ஸர்" செய்வது போல் ரசிகர்களுக்கும் ஒரு "ஸ்பான்ஸர்" தோன்றியது இதுவே முதல் தடவையாகவும் இருக்கலாம். கச்சேரிகளை நேரில் வந்து கேட்கும் ஆர்வத்தை வளர்க்கும் விதமாக அமைந்த இந்தத் திட்டம் நல்ல வெற்றி கண்டது. முதலில் தீர்மானித்ததை விடவும் அதிகமாகவே டிக்கெட்டுகளை வாங்கி விநியோகிக்க நேர்ந்தது!

அற்புதமான குரல் வளம் படைத்துள்ள மகாராஜபுரம் ராமச்சந்திரனின் கச்சேரி, அன்று 'ஓஹோ' என்று சொல்லும்படி அமைந்தது. நிகழ்ச்சி நிரலில் தமிழ் பாட்டுக்களை தாராளமாகச் சேர்த்துக் கொண்டிருந்தார். ("கச்சேரி களை கட்டணும்னா இன்று இது அத்தியாவசியமாகி விட்டது" என்கிறார் ராமச்சந்திரன்.) கல்கி அவர்களின் 'வண்டாடும் சோலை' பாடிய போது அந்தப் பாடலில் வரும் நாயகியின் உள்ளத்தைக் கண்ணன் கொள்ளை கொண்டது போலவே ரசிகர்களின் உள்ளங்களைக் கவர்ந்து விட்டார் ராமச்சந்திரன். அன்று அவர் பாடியவை அனைத்துக்கும் சிகரம் வைத்தது போல் அமைந்தது ராக மாளிகை விருத்தம்.

மகாராஜபுரம் சந்தானத்துக்கு நிகராக 80 சதம் வளர்ந்து விட்டார் ராமச்சந்திரன். அதாவது சரீரத்தில்! சாரீரத்திலும் சங்கீதத்திலுமோ 95 சதம் வளர்ந்தாயிற்று. இன்னும் ஐந்து சதம்தான் பாக்கி. சங்கீதத்தோடு மனப்பக்குவமும் சேரச் சேர அதையும் எட்டி விடுவார்.

கர்நாடக இசையில் இளம் தென்றலாக அடுத்த தலைமுறை போட்டி போட்டுக் கொண்டு உருவாகிறது என்பதற்கு கிருஷ்ணகான சபையில் கேட்ட வேறு சில கச்சேரிகளும் சாட்சி. இசையின் நுணுக்கங்களிலும் இலக்கணங்களிலும் தேர்ந்து விளங்குவதுடன் அவரவரும் தமக்கென்று ஒரு பாணி வகுத்துக் கொண்டும், சாகித்தியத்துக்கு முக்கியத்துவம் தந்து அர்த்தம் உணர்ந்தும் சுத்தமான உச்சரிப்புடனும் பாடுகிறார்கள்.


• மகாராஜபுரம் ராமச்சந்திரன்

நெய்வேலி சந்தானகோபாலன் கண்ணை மூடிக் கொண்டு பாட ஆரம்பித்தாரானால் கச்சேரி முடியும் வரை திறப்பதே இல்லை! அப்படி ஒரு ஆத்மார்த்தமான லயிப்பு! உதாரணமாக பூர்ண சந்திரிகா ராகத்தில் 'தெலிஸி ராமசிந்தன' என்ற தியாகராஜர் கீர்த்தனையைப் பலரும் 'ஜெட்' வேகத்தில் பாடித்தான் கேட்டிருக்கிறோம். ஆனால் அப்படிப் பாடும் போது பாடலின் அர்த்த பாவம் மறைந்து போகிறது. மாறாக சந்தான கோபாலன், சாகித்தியத்தில் வரும் கருத்து போலவே, அலை பாயாமல் ராமனிடம் சிந்தனை நிலை நிற்குமாறு பாடியது விசேஷம்.


• விஜய் சிவா


• சந்தான கோபாலன்

டி.கே. ஜெயராமனின் இசைக்கு வாரிசாகப் பெரிதும் முன்னேறி இருப்பவர் விஜய் சிவா. நிகழ்ச்சி நிரலை திட்டமிடுவதிலேயே ரொம்பக் கவனம் செலுத்தியிருந்தார். யதுகுல காம்போஜியும் சக்கரவாகமும் அள்ளிக் கொண்டு போயின. கல்கி, பாரதி பாடல்களும் இடம்பெற்றிருந்தன. சிவாவின் கச்சேரி சோபித்ததில் ஆச்சர்யமேயில்லை. ஆனால் சோபிக்க உறுதுணையாக இருந்த வயலின் காயத்ரி (பம்பாய்) ஓர் இனிய வியப்பு. வாய்ப்புக்கள் வழங்கப்படுமானால், இந்த இளம் தென்றல் கர்நாடக இசை உலகைப் புயலாக ஆக்கிரமிக்கும்.

– குட்டிகிருஷ்ணன்

# ஊடலில் தோற்றவர்

இள. அழகிரி

"டிக்கெட்... டிக்கெட்..."

பாக்கெட்டினுள் நுழைந்த கை வெறுமை உணர்த்தியது. கண்டக்டர் சுத்தல் அவசரம் உண்டுபண்ண, மறுபடியும் தேடி... வியர்த்துப் போனேன். பர்ஸ் மிஸ்ஸிங்.

"ஸார்... பர்ஸ் மிஸ்..."

"ஆயிடுச்சா?"

தர்மசங்கட சூழ்நிலை. அனைவரும் வினோதம் கலந்து பார்ப்பது போல ப்ரமை. கண்டக்டர் அசையாது முறைக்க... வயது மறந்து கூனினேன். குறுகினேன்.

என்ன பனிஷ்மெண்ட்?

தெரியவில்லை. கை சும்மா இருக்காமல் பேண்ட், சர்ட் என பர்ஸ் தேடியது. சில நிமிடங்களுக்குப் பிறகு அவரது பார்வையைச் சந்திக்க என்னிடம் திராணி இல்லை. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டேன்.

எனது மனம்... அவர் இப்படியெல்லாம் பேசக்கூடும் என்று பேசிக் காட்டியது.

'ஜஸ்ட்... ரெண்டு ரூபாய்க்கு எதுக்கய்யா... பொய் பேசுற...?'

'இந்த லட்சணத்துல டிப்-டாப் டிரஸ் வேற... ஊரை ஏமாத்துற உலக்கைக் கட்டை... ஃபைன் கட்டு... மொதல்ல...'

அவசரமான விசில். பஸ் நின்றது. கண்டக்டர் காக்கை விரட்டுவது மாதிரி சைகை செய்தார்.

"சீக்கிரம்..."

அதட்டல். படி தடுமாறியது. கீழே விழுந்து மண்ணைக் கவ்வாத குறை. கழுத்தைப் பிடித்துத் தள்ளுவதை விட இதில் கேவலம் அதிகமிருந்தது.

ஆபீஸ் போவதா... வீட்டுக்குத் திரும்பி விடலாமா என்றொரு குழப்பமும் எழுந்தது. எங்கே போனாலும் அவமானம் துரத்தித் துரத்தி வந்து துளைத்தெடுப்பது, சில நாட்களுக்குத் தவிர்க்க முடியாதது.

கண்டக்டர் நான் சொன்னதை நம்பவில்லை. பர்ஸ் தொலைத்தவன் என்ன பண்ணுவான். கத்த வேண்டும். காட்டுக் கத்தலாக... 'ஐயோ... பணம்... பர்ஸ்...' நாக்குத் திணற, பணம் போன பரிதாபத்தில்... புலம்பவும் வேண்டும்.

இப்படி எதுவும் நான் செய்யவில்லை. அவருக்குச் சந்தேகம் வலுத்திருக்க, இது ஒரு மிகப் பெரும் காரணமாக இருந்திருக்கும்.

நிஜத்தில் நான் அப்பிராணி.

அதிர பேச வராது. வீண் வார்த்தை இருக்காது. சினிமா பார்க்கும் போது கூட ஒரு சிரிப்பு... 'உச்ச... உச்ச...' ம்கூம்... எல்லாம் மனதுக்குள்ளேயே!

ஆனாலும் எனக்கு அந்தக் கோபம் வந்திருக்கக் கூடாது. இல்லையெனில் சம்பளப் பணம் முழுவதும் பறிபோய் இருக்குமா?

நேற்றைய சம்பளம், இன்றும் என்னிடம் இருந்ததற்குக் காரணம்... மனைவி கார்த்திகாவுடன் எழுந்த பிரச்னையே!

"வெறும் ஆயிரத்து ஐநூறு வச்சு... என்ன குடும்பம் பண்றது?" நீட்டி முழங்கும் கார்த்திகாவிடம், அசதி போக்க காப்பி எதிர்பார்த்தேன். சம்பளக் கவர் வாங்கினவள், முகத்தில் எறியாத குறையாகத் திரும்பத் தர...

ஆவி பறக்க வந்த காப்பி தரையில் சிதறியது. ஆத்திரம் தலைக்கு ஏறியது.

முப்பது நாள் உழைத்தும் மனநிம்மதி இல்லை.

கொடுக்கிற வேலை ஒன்று விடாமல் வாங்கி விடவும் வேண்டும். முதல் தேதியில் கை நிறைஞ்ச புருஷனும் வேண்டும். இந்த மனைவிமார்களுக்கு ரொம்பவும் பேராசை.

"இத்தனை மாசம்... எப்படி ஓட்டினியாம்?"

அதிர்ச்சியில் இருந்து மீளாத அவள்... வார்த்தை தேடித் தடுமாறினாள்.

"ஒவ்வொரு மாசக் கடைசியையும் பங்க்சர் சைக்கிளை மிதிக்கிற மாதிரி என்ன சிரமப் படுறேன்னு எனக்குத்தானே தெரியும். இதுல மளிகைக் கடன் கொடுப்பேனா... பால் கணக்குத் தீர்ப்பேனா... வீட்டு வாடகை வேற சொளையா நானூற்று ஐம்பது ஒதுக்கிடணும்... கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க... எனது சாமர்த்தியம் மட்டும் இல்லேனா நீங்க நடுரோட்டுலதான் நிக்

களும்..."

எனக்கும் சாமர்த்தியம் உண்டு என்று வீம்பு பிடித்ததில்...

இப்போது ரோட்டில் நின்று கொண்டிருக்கிறேன். வீட்டுக்குத் திரும்புவதே சரி எனப் பட்டது. சந்தோஷ மனதுடன் வேலை பார்க்கும் போதே மானேஜரிடம் ஆயிரம் குற்றம்... குறைகள் வரும். குதறிச் சிதைந்த இந்த மனநிலையில் போனால் கண்டிப்பாய் 'மெமோ'வுடன் தான் திரும்ப வேண்டி இருக்கும். எனவே, விடுப்பு எடுத்துக் கொள்ளுவது புத்திசாலித்தனம்.

"கழுத... எனக்கு சாமர்த்தியம் பத்தாதா...?"

அப்பிராணி நான் மனம் பேதலித்தேன். பிராணியானேன். எனது ஐந்து விரல்களும் அவன் கன்னத்தில் என்னையும் அறியாமல் பதிந்தன.

"ரொம்ப... சாமர்த்தியம்... சாமர்த்தியம்'னு தம்பட்டம் அடிக்காதடீ... இந்த மாசம் இந்த சம்பளப் பணம் வைத்து எப்படி 'ஜாம்... ஜாம்'னு குடும்பம் பண்றேன் பார்..."



பொம்பளையை டம்மி ஆக்கி விட்ட திருப்தி நெஞ்சில் பரவியது.

பால் கடன்... வீட்டு வாடகை கொடுத்தேன்.

காலையில் எழுந்ததும் – மளிகைக் கடனை மாலையில் தீர்த்து விட எண்ணம் கொண்டேன். கனம் குறைந்தது. கையில் இருந்தது. எண்ணூறு சில்லறை.

ஒரே பொழுதில் திகில் பரவினாலும்... ஜஸ்ட் இன்னும் இருபத்தெட்டு நாள்.

ஆபீஸ் கிளம்பும் போது கூட ஒரு சுதந்திரம் உணர்ந்தேன்.

தினந்தினம் ஒன்பதரை மணி ஆகிவிட்ட கதியில்...

'பஸ் பிடிப்பேனா... மணி பார்ப்பேனா...' என அவசரத்தில் வியர்த்து பஸ் காசுக்காக மனைவி கையை எதிர்பார்க்க வேண்டாம். அவளும் ஈரக்கை துடைத்தவாறு அலுப்பும் சலிப்புமாக ஐந்து ரூபாய் நீட்ட வேண்டாம். அதில் ஒரு ரூபாய் டீ காசு. சில சமயம் விதி விளையாடும். பஸ் கொஞ்சம் முன்னதாகப் போய் விடும். அல்லது வரவே வராது. பல சமயங்களில் ஆபீஸ் ஸ்டாஃப் யாரேனும் தென்படுவார்களா... என எதிர்பார்த்து தொற்றிக் கொள்வது எனது குடிசைத் தொழில்.

இனி இப்படியொரு பிரச்னை இருக்கவே இருக்காது. ஆட்டோ அமர்த்தி, அமர்க்களம் பண்ணலாம். தாராளாய் காப்பியை சப்பிக் கொண்டு சாப்பிடலாம்.

இப்படி எல்லாம் நினைத்து, உடம்பில் திமிர் ஏற்றித் திரிந்தது. துவண்டு நடக்கும் போது ஞாபகம் வருகிறது.

மனைவியிடம் வீம்பு செய்து... யாரோ மூன்றாவது மனுஷாளிடம் தலைசொரிந்து, கேவலம்... என் தன்மானத்துக்கு பலமானதொரு சாட்டையடி.

மனைவியிடம் ஈகோ தேவையா? அவள் யார்... என்னில் பாதி. என் நலனில் அவள் நலம் காண்பவள். முழுவதுமாக என்னை நம்பி வந்திருப்பவள். எனக்காகவே வாழ்கிறவள்.

நினைவுகள் எங்கெங்கோ செல்ல... உள்ளம் சிலிர்த்து... உண்மை உணர்த்தியது.

மாதக் கடைசி சிரமத்தை எதற்காகச் சொன்னாள்? என்னை மற்ற நாட்களைப் போல சரியாக கவனிக்க முடியவில்லையே என்ற ஆதங்கத்தில்தானே...

தப்பிதம் கொண்டது எனது அறியாமை. ஆசையான காப்பியைச் சிதற அடித்தது எனது குரங்குத்தனம். கைநீட்டி அடித்தது அயோக்கியத்தனம்.

என் கார்த்திகா என்னை மன்னிப்பாளா?

என்னைப் பார்த்ததும்... அவள் ஒன்றுமே பேசவில்லை. ஏமாற்றமாக இருந்தது. ஏதோ கேட்க நினைத்து, மனதுக்குள் தடுமாறுவது நன்றாகத் தெரிய, பேச மாட்டாளா... என பரிதாபமாய் நின்றேன்.

"கா... கார்த்தி... எ... என்னை மன்னிச்சுடும்மா..."

"ஐயோ... என்னங்க பெரிய வார்த்தை எல்லாம்..." நழுவப் போனவள் ஓடி வந்து ஒட்டிக் கொண்டாள்.

"என்னை மன்னிச்சுட்டே தானே கார்த்திகா?" கண்ணீரில் தேய்ந்த என் வார்த்தைகள்.

"கார்த்திகா... உன் சாமர்த்தியம்... எனக்கு வரவே வராது... என்னால் சம்பாதிக்க மட்டுமே முடியும். குடும்பத்தை பாதுகாப்பாய், அரவணைப்பாய் நடத்த உன்னால் மட்டுமே முடியும்!"

கண்டக்டர் முன்நின்றது போல கூனிகுறுகி நின்றேன். ஆனால் இங்கே அவமானம் ஏதும் உணரவில்லை.

"பொறுப்பா குடும்பம் நடத்தறது என்னால முடியவே முடியாத காரியம். பணத்தை பொறுப்பா முழுசா ஒருநாள் வச்சிக்கத் தெரியாத எனக்கு, சர்வசத்தியமா உனது சாமர்த்தியம் வரவே... வராது கார்த்திகா."

கோபம் கலைந்து விட்ட கார்த்திகா, "என்னாச்சு...?" என்றாள். மனதில் சந்தோஷம் பரவியது.

"பணம் தொலைச்சுட்டேன்... கார்த்தி..."

"தொலைச்சுட்டீங்களா... தேடிப் பாத்தீங்களா... எங்க விட்டுட்டீங்க?"

எனது சில கண மௌனம் அவளது உலுக்கலில் கலைந்தது.

"அப்பிராணியா இருக்கீங்களே... பர்ஸை வீட்டிலேயே விட்டு விட்டுப் போயிட்டீங்க... பேய் முழி வேண்டாம். இந்தா பிடிங்க உங்க பர்ஸை..."

அழகான புன்னகையுடன் கைநீட்டின கார்த்திகாவிடம் எனது பர்ஸ்.

என் பர்ஸ் தொலையவில்லையா? சந்தோஷம் பொங்கியது. எப்படியோ... இந்த மாதம் முழுக்கப் பட வேண்டிய அவமானம் ஒரே நாளில் பட்டாகி விட்டது. இனி ஜென்மத்துக்கும் இது மாதிரியானதொரு அவமானம் சந்திக்கவே கூடாது.

"கார்த்திகா... அந்தப் பணம் உன்னிடமே இருக்கட்டும். நீ தினம் ஐந்து ரூபாய் கொடுப்பதும் ஓட்டமும் நடையுமாய் பஸ்க்கு ஓடுவதிலும்... எவ்வளவு கௌரவம் இருக்கிறது தெரியுமா?"

அணைப்பாய் தூக்கினேன் என் கார்த்திகாவை.

**செ**ன்னையின் ஏதாவது நான்கு பிரதான பகுதிகளை ஒரு ரவுண்ட் அடித்து வாருங்கள். பிரும்மாண்டமான கட்டுமானப் பணிகள் ஆங்காங்கே துரிதமாக நடந்து கொண்டிருப்பது கண்ணில் படாமல் போகாது! ஒரு பக்கம் வளர்ப்பு மகன் திருமண ஏற்பாடு ஜரூராக இருப்பினும் ஜெ., இன்னொரு விஷயத்திலும் தீவிரமாக இருக்கிறார் இப்போது.

அது –

சவுத் ஏஷியன் ஃபெடரேஷன் கேம்ஸ். டிசம்பரில், சென்னையில் நடக்கப் போகிறது!

இந்தியா, மாலத்தீவுகள், நேபாளம், பாகிஸ்தான், ஸ்ரீலங்கா ஆகிய இந்த 'சார்க்' நாடுகள் மட்டும் கலந்து கொள்ளும் இந்த விளையாட்டுப் போட்டிகள், முதலில் தொடங்கப்பட்டது 1984ல். நேபாளத்தில் நடந்தது. இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை நடைபெறும் இப்போட்டிகள் கடைசியாக நடந்தது 1993ல், டாக்காவில்.

டாக்கா போட்டிகள் நடந்து கொண்டிருக்கும்போதே, இந்திய ஒலிம்பிக் சங்கத் தலைவர் சிவந்தி ஆதித்தனுக்கு, அடுத்த உற்சவத்தை சென்னையில் நடத்த ஆசை வந்து விட்டது. முதல்வர் ஜெவிடம் கேட்ட போது உடனே 'ஓகே' சொல்லி விட்டார். அப்போது முதல்வர் – பிரதமர் உறவு வெகு சுமுகமாக இருந்தபடியால், போட்டியை இங்கே நடத்துவதற்கான ஏற்பாடுகள் ஜரூராக முடுக்கி விடப்பட்டன!

**ப**ல நாடுகள் கலந்து கொள்ளும் இப்போட்டிகளுக்கான அரங்கங்கள் சர்வதேசத் தரத்தில் அமைய வேண்டியது அவசியம். ஆனால் இங்கிருப்பவை? கருந்தட்டான்குடியும் கூடுவாஞ்சேரி லெவனும் ஆடுவதற்கு மட்டுமேயானவை.

ஆகவே ரூபா 50 கோடி ஒதுக்கப்பட்டது! நான்கு புதிய ஸ்டேடியங்கள்!

1. சென்ட்ரலை ஒட்டி பழைய மிருகக்காட்சி சாலை இருந்த இடத்தில் ஒரு புதிய இன்டோர் ஸ்டேடியம். (ரூ. 20 கோடி)

2. நுங்கம்பாக்கம் லேக் ஏரியாவில் ஒரு டென்னிஸ் கோர்ட் & ஸ்டேடியம் (ரூ. 5 கோடி)

3. வேளச்சேரி ரோடில் நீச்சல் போட்டிகளுக்கான ஒரு வளாகம். (ரூ. 12 கோடி).

4. எக்மோர் ராதாகிருஷ்ணன் ஸ்டேடியத்தை சர்வதேசத் தரத்தில் ஹாக்கி விளையாட்டுப் போட்டிகள் நடத்துவதற்கேற்ப மாற்றி அமைக்கும் வகையில் ரூ. 9 கோடி.

மற்றபடி ஏற்கெனவே உள்ள ஸ்டேடியங்களையும் திருத்தி, செப்பனிட சில கோடிகள்.

மொத்தம் 240 கோடி எஸ்டிமேட் போட்டிருக்கிறார்கள், இந்தப் போட்டிகளை நடத்த! அத்தனையும் தமிழக அரசு செலவுதான் என்பது கவனிக்க வேண்டிய விஷயம். (பட்ஜெட்டில் துண்டு என்ன, வேஷ்டியே விழும்!)





• சின்னத்திலும் ஒம்போது!

இந்த ஸ்டேடியங்களைத் தவிர, கோயம்பேடு மார்க்கெட்டுக்கு அருகே ஒரு 'விளையாட்டு கிராமமும்' கட்டப்படுகிறது!

ஏழு நாடுகளிலிருந்து வரவிருக்கிற சுமார் 2,500 வீரர்கள் தங்குவதற்காக, 560 அடுக்கு மாடி வீடுகள் கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன!





• நீச்சல் வளாகம்....



• சிவந்தி ஆதித்தன்

• நுங்கம்பாக்கத்தில் டென்னிஸ்கோர்ட் உருவாகிறது.....

# கோடிக் கணக்கில் விளையாடுகிறார்கள்!

புதிய ஸ்டேடியங்கள் நான்கில், மூன்றைக் கட்டுபவர்கள் தாராபூர் கம்பெனிக்காரர்கள். லேக் ஏரியாவில் நாம் சந்தித்த ஒரு காண்ட்ராக்டர் சொன்னார் :

"கடந்த 8 மாதங்களாகக் கட்டுமானப்பணி இரவு பகலாக நடந்து வருகிறது. சுமார் 3000 பணியாளர்கள் பணியில் ஈடுபட்டுள்ளார்கள். இடையில் இரும்பு, சிமெண்ட் கிடைப்பதில் கொஞ்சம் சிக்கல் இருந்தது. இப்போது ஓ.கே!"

கட்டுமானப் பணிகளை மேற்பார்வை பார்க்கும் ஒரு அரசு அதிகாரியைச் சந்திக்கச் சென்ற போது, வெகு அவசரமாக "எல்லாமே முறைப்படி டெண்டர் கொடுக்கப்பட்டு பின்பே காண்ட்ராக்டர்கள் நியமிக்கப்பட்டனர்" என்றார்!

அ.தி.மு.க. அரசுக்கு, '10 சதவீத அரசு' என்று ஒரு 'செல்லப் பெயர்' உண்டே சாமி!

இப்போட்டிகளின் சின்னமாக தீப் பந்தத்தை ஏந்திச் செல்லும் இளம் சிங்கம் உருவாக்கப்பட்டுள்ளது. படத்தில் பாருங்கள்... பனியனில் 9!

போட்டி நடக்கும் தேதிகளில் கூட ரொம்ப கவனமாக இருக்கிறார்கள். 18-ஆம் தேதி (8+1=9) தொடங்கி 27 (2+7=9) ஆம் தேதி முடியுமாறு அமைத்திருக்கிறார்கள்!

மொத்தம் 14 போட்டிகள் நடக்கவிருக்கின்றன. எப்படியாவது அதைப் பதினெட்டாக்க முயன்று வருவதாகச் சொல்கிறார்கள்!

முதல்வரின் எண் ராசி எதில் போய் முடியப் போகிறதோ!

அது சரி. விளையாட்டுப் போட்டிகளெல்லாம் முடிந்தபின் கோயம்பேடு வீடுகள் என்ன ஆகும்?

தெற்காசியப் போட்டிகளின் இயக்குநராக நியமிக்கப்பட்டிருக்கும் ஆர்.கே. சர்மாவிடம் கேட்ட போது -

"வீட்டு வசதி வாரியம்தான் கட்டுகிறது. ஆகவே, பொது மக்களுக்கு அப்படியே விற்று விடுவோம்!"

ஆமென்!

— கௌசல்யா

படங்கள் : யோகா

●● பல வருஷங்களாக வயிற்றுவலியால் அவதிப்படுகிறேன். டாக்டர்கள், 'சில சமயம் குடல் ஒட்டிக் கொள்வதால் சாப்பாடு ஜீரணம் ஆகாமல் வலிக்கிறது; இதற்கு வைத்தியம் இல்லை' என்கின்றனர். இப்படிப் பட்ட நோய் இருந்து குணமானவர்கள் இருந்தால் தொடர்பு கொள்ளவும்.

– பி. விசுவநாதன்,
3/101 B, திரூஃபோர்லேண்ட்ஸ்,
சேலம் – 16.

●● குவார்ட்ஸ் உள்பட, கடிகாரம் பழுது பார்த்தலில் பயிற்சி பெற விருப்பம். கற்றுத் தர முன்வருபவர், கட்டணம் பற்றிய விவரத்துடன் தொடர்பு கொள்ளவும்.

– கே. ஆர். வேங்கடராமன்,
ஃப்ளாட் F 4,
கதவு எண் 1, இரண்டாவது லிங்க் தெரு,
மந்தவெளிப்பாக்கம்,
சென்னை – 28.

●● "தமிழகப் பெண் கவிஞர்கள்" என்ற தலைப்பில் ஐம்பது கவிஞர்கள் பற்றிய



# பா ல ம்

குறிப்புக்களையும் கவிதைகளையும் தொகுத்துள்ளேன். நூலாக வெளியிட விரும்புவோருக்கு முகவரி :

– எம். எஸ். தியாகராஜன்,
7, 25-வது தெரு, தங்கதல்லூர்,
சென்னை – 61.

●● டில்லி, பம்பாய் போன்ற நகரங்களில் விவாக வயதுள்ள ஆண், பெண்கள் நல்ல வேலை, மற்ற வசதிகளுடன் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுக்கு வாழ்க்கைத் துணை தேட உதவ, மன்றம் தொடங்கியுள்ளேன். ஜாதிமத பேதமின்றி முழு விவரங்களுடன் எழுதவும். கட்டணம் இல்லை.

- B. Krishnamurthy,
Tamilian Marriage Bureau,
107 F, First Floor, Sector IV, DIZ Area,
Bangla Sahib Road, New Delhi - 1.

●● எப்போதும் பாக்கெட்டில் வைத்துக் கொள்ளும் அளவில் எலெக்ட்ரிஷியன்களுக்கு உதவக்கூடிய புத்தகம் இலவசமாகத் தர முன்வந்துள்ளேன்.

– எஸ். மதியழகன்,
ஜெமின் கன்சல்டிங்ஸ்,
கோத்தாரி சுகர்ஸ் & கெமிகல்ஸ்,
காரைக்கால் – 611 002.

●● ஆஸ்திரேலிய கிட்டுகள் (Love birds) வளர்ப்பதற்குத் தேவைப்படுகிறது. விலை விவரம் தெரிவிக்கவும்.

– ஆர். வி. விவேகானந்தன்,
D-65, ஹவுஸிங் யூனிட்,
பட்டுக்கோட்டை – 614 602.

●● பண்டித சோமதேவ சர்மா எழுதிய "சிராவண அவதாரிகை" மற்றும் ஸ்ரீஹரி எழுதிய "வீட்டு வைத்தியம்" நூல்கள் தேவை. விலை குறிப்பிட்டு எழுதவும்.

– கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
AG-1, 58-D, MIG Flats,
Vikaspuri, New Delhi - 18.

●● ஆங்கிலம் பேசப் பயிற்சி பெற விருப்பம். தனிப்பட்ட முறையில் கவனம் செலுத்தி கட்டணத்துக்கு பயிற்சி தரக் கூடியவர்கள் தொடர்பை விரும்புகிறேன்.

– எம். குமார்,
58/3 வடக்கு சித்திரகுளம்,
சென்னை – 600 004.

●● 87-88, 88-89ம் ஆண்டுகளில் மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. அரசியல் (தமிழ்) படித்தவர்கள் இரண்டு வருட புத்தகங்களையும் தந்து உதவ வேண்டுகிறேன். விலைக்கு வாங்கவும் தயார்.

– ஆர். மணி அம்மை,
C/o N.P. Pillai,
Karimpinthottam,
Muthakara, Kollam - 13.

●● பாமரோசா புல் சாகுபடி செய்து வரும் விவசாயிகளுக்கு எண்ணெயின் தரம் சிறப்பாக இருக்க தொழில்நுட்ப உதவியும், விற்பனைக்கு உதவியும் பிரதிபலன் எதிர்பாராமல் செய்து கொடுக்கிறேன்.

– எம். கிருஷ்ணசாமி,
32 A, திருக்கச்சி நம்பி தெரு,
காஞ்சிபுரம்.

●● தேவை : An Introduction to probability Theory with Statistical applications by Michel A. Gold berg. உதவுக.

— G. Santhosh,
233, Vinayaka Nagar,
Devasandra, Krishnarajapuram,
Bangalore - 560 036.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி - தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது.)

# இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றில்லை
# இல்லாள் அகமகிழ தருகிறோம்
# நல்லதோர் இல்லம்!




பனித்துளிகள் ஜொலித்திடும் புல்வெளி, பச்சைப் பசேலென்ற பூமி, சிறகடிக்கும் பறவைக் கூட்டம், குளிர்தரும் நீர்ச்சுனைகள். அன்னை பூமியின் அரவணைப்பையும், அமைதியையும் தேடி நெடுந்தூரம் போக வேண்டாம்.

உங்கள் கனவு இல்லம் இதோ! சென்னையின் பரபரப்பு பாதிக்காத கிண்டி ராமாபுரத்தில் நவீன கட்டடக்கலையின் சாதனையாய் ஹோம்ஃபைண்டர்ஸ். குறைந்த செலவில் நிறைவான இல்லங்கள் அமைப்பதில் அனுபவம் பெற்றவர்களின் கைவண்ணம்.

## இல்லச் சிறப்புகள்

- ஒவ்வொரு ஃப்ளாட்டுக்கும் டெலிபோன் இணைப்பு
- நீச்சல் குளம். விளையாட்டுத்திடல்
- எல்லா அறைகளிலும் செராமிக் தரை
- ஒவ்வொரு ஃப்ளாட்டுக்கும் தனியாய் வாட்டர் டேங்க், 24 மணி நேரமும் தண்ணீர் வசதி
- எழிலார்ந்த சுற்றுப்புற அமைப்பு
- கேபிள் டிவி - சாடிலைட் டிஷ் ஆன்டனா
- வெளியே சென்று வர டீலக்ஸ் கோச் சர்வீஸ்
- இன்டர்காம் இணைப்புள்ள செக்யூரிட்டி சர்வீஸ்
- கடைகள், மருத்துவ வசதி, குழந்தைகள் நல அமைப்பு
- சமூகப் பொழுது போக்குக் கூடம்
- 3 ஃபேஸ் மின்சார இணைப்பு
- சமயலறையில் எக்ஸ்ஹாஸ்ட் ஃபேன்.

தெரிகிறதா
தொட்டுவிடும் தூரத்தில் உங்கள் சின்ன சொர்க்கம்?
சொந்தமாக்கிட தொடர்பு கொள்ளுங்கள் இன்றே!

## முந்துங்கள்!

1வது கட்டமாக
76 ஃப்ளாட்டுகள் கட்டி
முடித்து குடி வந்தாயிற்று.
2வது கட்டம்
80 டீலக்ஸ் ஃப்ளாட்டுகள்
வேகமாய் உருவாகின்றன

ஹோம்ஃபைண்டர்ஸ் இல்லங்கள்
சின்னச் சின்ன சொர்க்கங்கள்.

**ஹோம்ஃபைண்டர்ஸ் ஹவுசிங் லிமிடெட்**

ரேஸ் வியூ டவர்ஸ், 71, மவுண்ட் ரோடு, (கிண்டி ரயில் நிலையம் அருகில்) கிண்டி, சென்னை-600 032.
போன்: 2340762/2340763/2348902
ஃபேக்ஸ் : 91-044-2348911

EFFICIENT

# நீங்கள் கேட்டவை

## - தராசு


• சரியான ஜோடி...?

● எஸ். பரே, அனுமந்தன்பட்டி.

? கிராமத்தில் இருந்தவரையில் 'தமிழ்' 'தமிழ்' என்று மேடையேறி முழங்கிய என் நண்பன் இப்போது தலைநகரம் சென்னைக்கு வந்தபின் 'என்னை வாழ வைப்பது ஆங்கிலம்தான்' என்கிறான். உங்கள் கருத்து...?

! ஆங்கிலமே அறியாத பலர் தலைநகரில் வெற்றிக்கொடி நாட்டியிருக்கிறார்கள் என்பதையும் மறக்கக் கூடாது.

● ம. மாரிமுத்து, மதுரை - 3.

? அமுலாக்கப் பிரிவினரால் தேடப்பட்டு வரும் தினகரன், முதல்வர் வீட்டுத் திருமணத்தில் கலந்து கொண்டது பற்றி தங்கள் கருத்து...?

! அமுலாக்கப் பிரிவினர் தாற்காலிகமாக முதுகெலும்பைக் கழற்றி ஆணியில் மாட்டியிருக்கிறார்கள் போலும்... மத்திய அரசின் ஆணைப்படி!

● ஜி. இந்திரா, திருச்சி - 14.

? சென்னை மாவட்ட கலெக்டர், ஆசிரியர் தினம் என்பது தாகூரின் பிறந்த தினமே என்று மேடையில் பேசியதாகச் செய்தி வந்துள்ளதே!


• எப்படி மனம் வந்தது...?

! ஒருமுறை அல்ல; பலமுறை அப்படியே பேசியபின், அதிகாரிகள் திருத்த, 'ஓஹோ! அப்படியா?' என்று மேடையிலேயே தமது தவறை உணர்ந்து திருத்திக் கொண்டிருக்கிறார். அந்தத் துணிவைப் பாராட்டத்தான் வேண்டும்.

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? குப்பை பத்திரிகைகள் பெருகி வருவதற்குக் காரணம், தமிழ் வாசகர்களின் தரம் தாழ்ந்து கொண்டே வருவதுதான் என்று எழுத்தாளர் சாவி சொல்லியிருப்பது பற்றி...?

! சினிமாவின் தரம் தாழ்ந்து போவதற்கு ரசிகர்களே காரணம் என்பதைப் போன்றதுதான் இந்த வாதமும்.

● டி.ஆர். பாலசந்தர், திருநெல்வேலி.

? பிரபு தேவா - ரோஜா, பிரபு தேவா- நக்மா; பிரபு தேவா - ஷில்பா ஷெட்டி... எது சரியான ஜோடி?

! 'பிரபுதேவா - ரக்மா!' என்று சொல்லலாம்னா மனுஷன் அந்தர் பல்டி அடித்து விட்டாரே!

● பா. கார்த்திகேயன், சென்னை - 15. ❑

? 'என்னிடம் ஆளுனர் தவறாக நடந்து கொண்டார்' என்று சட்டசபையில் பகிரங்கமாகக் கூறி விட்டு, இப்போது அவரைச் சந்திக்க ஜெ.வுக்கு எப்படி மனம் வருகிறது...?

## முதல்வர் வீட்டுத் திருமணத்தில் தினகரன்...?

! அரசியல்வாதிக்கு மனசும் கிடையாது; மனசாட்சியும் கிடையாது!

● சி. தெ. ரஜினி அருள், மணக்காடு.

? போலீஸ் நிலையங்கள் கம்ப்யூட்டர் மயமாகப் போகின்றனவாமே?


• சொல்லும் காரணம்...



• அடுத்த இலக்கு...!

! கம்ப்யூட்டரைஸ்ட் மாமூல்?!

● அ. சண்முகசுந்தரம், சென்னை - 64.

*? வளர்ச்சி, வேகம், உயரம் என்ற ஒலிம்பிக் வாசகமே தமிழக அரசின் தாரக மந்திரம் என்று ஜெ. சொல்கிறாரே?*

! உண்மைதான்! ஆட்சியிலிருப்பவரின் சொத்து வளர்ச்சி, சுரண்டல் வேகம், கட்அவுட் உயரம்!

● எஸ். சாந்தி, காட்பாடி.

*? கறுப்புப் பணத்தை வெள்ளைப் பணமாக்கத்தான் முதல்வர் வளர்ப்பு மகனுக்கு இவ்வளவு ஆடம்பரமாகக் கல்யாணம் செய்து வைத்தார் என்று பாமர மக்கள் பேசிக் கொள்கிறார்களே...?*

! அவ்வளவு தூரம் நமது பாமர மக்கள் விஷயம் தெரிந்தவர்கள் என்றால் ரொம்ப சந்தோஷம்! ஆனால், நடந்த ஆடம்பரங்களில் மயங்கிப் போய், பலர் கண்காட்சி போல் அலங்காரங்களைக் கண்டுகளித்தார்கள் என்பதும் சிலர் அவற்றின் அருகே நின்று புகைப்படம் கூட எடுத்துக் கொண்டார்கள் என்பதும் தான் வேதனை!

● விருதை ராஜப்ரியன், திருச்சி - 8.

*? ஒரு திருமணத்துக்கு எவ்வளவு செலவாகும்?*

! அது, நீங்கள் எப்படியெல்லாம் சம்பாதிக்கிறீர்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது!

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

*? முதல்வரின் வளர்ப்பு மகன் திருமணத்தால் சென்னை வாசிகளுக்கு ஏதாவது பலன் கிடைத்ததா?*

! சில பள்ளிக் குழந்தைகளுக்கு 2-3 நாள் விடுமுறை கிடைத்த சந்தோஷம். நகரில் பலர் வீட்டில் குறிப்பாக அடையாறு, சாந்தோம் பகுதியில் - செப்டம்பர் பத்தாம் தேதி வாழைத் தண்டு பொறியல், கோசுமல்லி, சாம்பார்...

● பூமலை மணியன், தி. அகரம்.



• மிரட்டியது நியாயமா?

*? பொது மக்களுக்கு இடையூறு ஏற்படாத வகையில் வளர்ப்பு மகன் திருமணத்தை நடத்த வேண்டும் என்று உயர்நீதி மன்றம் கூறியிருந்ததே... அதன்படி நடந்ததா?*

! நீதிமன்றத் தீர்ப்பை அவமதித்ததற்காக ஒரு தனி வழக்கே தொடரும் அளவுக்கு அந்த உத்தரவு மீறப்பட்டிருக்கிறது!

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

*? "பஞ்சாயத்து தேர்தல் நடத்தாத மாநில அரசுகள் 'டிஸ்மிஸ்' ஆகும்" என மத்திய அமைச்சர் ஜெகந்நாத் மிஸ்ரா மிரட்டியிருப்பது நியாயமா?*

! பஞ்சாயத்து ஆட்சி தொடர்பான சமீபத்திய சட்ட மாற்றங்களுக்குப் பிறகு அந்தக் கடமையை நிறைவேற்றும் கட்டாயம் மாநில அரசுகளுக்கு ஏற்பட்டுள்ளது. ஆனால் இன்று பதவியில் இருக்கும் பலர் சட்டத்தையே மதிப்பதில்லை என்பதால் மத்திய அமைச்சர் மிரட்ட வேண்டிய அவசியமும் ஏற்படுகிறது.

● எல். வித்யா, திருச்சி - 2.

*? காந்திஜி தினமும் ராட்டையில் நூல் நூற்பாராமே? அது மாதிரி நமது முதல்வர் ஏதாவது செய்கிறாரா?*

! 'நூல் விடுகிறார்'!

● ஆ. திருவாசகமணி, புஞ்சைபுளியம்பட்டி.

*? பஞ்சாப் முதல்வரைப் படுகொலை செய்த அமைப்பு, அடுத்த குறி நரசிம்மராவ்தான் என எச்சரிக்கை விடுத்துள்ளதே?*

! விடுதலைப் புலிகளும் அவரை அடுத்த இலக்காக அறிவித்துள்ளது தெரிய வந்திருக்கிறது. இலங்கை அதிபரையும் கொலை செய்ய பிரபாகரன் புலிப் படைக்கு உத்தரவிட்டிருக்கிறாராம். ஏதோ பூ பறிக்கச் சொல்வது போல் உயிர் பறிக்க உத்தரவிடும் இயக்கங்கள், மக்களின் அச்சம் கலந்த அடிபணிதலைப் பெறலாமேயொழிய, அன்பு கலந்த ஆதரவைப் பெற முடியாது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
பா. கார்த்திகேயன்,
34, வேணுகோபால் தெரு,
மேற்கு சைதை,
சென்னை - 15.

## வர்த்தமானன் வழங்கும் மாபெரும் அகராதிகள்

# Dictionary ! Dictionary ! Dictionary !
# Dictionary ! Dictionary ! Dictionary !

### அத்தனையும் அகராதிகளே !
### ஆம் ஆறு அகராதிகள் !

## முன்னர் வெளிவந்த அவை வேறு; இப்போது வெளிவரும் இவை வேறு

*அவை ஆங்கிலம் கற்க வந்தவை; இவை ஆங்கிலத்தில் புலமை பெற வருபவை!*

### 1. Dictionary of Synonyms and Antonyms

**ஒத்த கருத்துடைய சொற்கள் — எதிர்ச் சொற்கள் அகராதி**




ஒரே பொருளைத் தரும் சொற்கள் பல எம் மொழியிலும் உண்டு. அதுபோலவே எதிரான பொருள் தரும் சொற்களும் பல உண்டு. ஒரு பொருளைக் குறிக்கும் ஒரு சொல்லையே திரும்பத் திரும்பக் கூறும்போது படிப்பதற்கும் கேட்பதற்கும் அலுப்புத் தட்டும். மாறாக, ஒரே பொருளைத் தரும் வேறு வேறு சொற்களைக் கூறும்போது, உணர்ச்சி குன்றாமல் இருக்கும்; உற்சாகம் குறையாமல் இருக்கும். இங்கேகூடப் பாருங்கள், 'குன்றாமல்', 'குறையாமல்' என வரும் இரு சொற்கள் ஒரே பொருளைத் தந்து சுவை கூட்டும் பான்மையை! ஆங்கில மொழியில் beautiful, excellent, brilliant, fantastic, marvellous, superb, wonderful போன்ற பல சொற்கள் ஏறக்குறைய ஒரே பொருளைத் தந்து உணர்ச்சிப் பிரவாகமாக இன்பம் பயக்கின்றன! இவை போன்ற ஏராளமான சொற்கள் பல இதில் உண்டு. ஆங்கில மொழியில் பெரும் புலமை பெற விரும்புவோர்க்கு இந்நூலும் தேவையே!

### 2. Dictionary of Idioms and Phrases

**மரபுச் சொற்கள் — தொடர்கள் அகராதி**
**தமிழ் மொழி பெயர்ப்புடன்**




மரபுச் சொற்கள், தொடர்கள் காலங்காலமாக — வழிவழியாக வழங்கி வரும் சொற்கள். பொருள் அறிந்து இவற்றை எழுதும் போதும், பேசும்போதும் பயன்படுத்த வேண்டும். இத்தகைய சொற்கள், தொடர்கள் ஆங்கில மொழியில் ஏராளமாக இருக்கின்றன. ஆயினும் தமிழ் விளக்கத்துடன் வரும் அகராதி இஃது ஒன்றே!

ஆங்கில மொழியில் புலமை பெறப் பெரிதும் துணை செய்யும் இந்நூல்!

### 3. Dictionary of Proverbs

**பழமொழிகள் அகராதி — தமிழ் விளக்கத்துடன்**




பழமொழி என்பது நம் முன்னோர்கள், தங்கள் அனுபவத்தில் கண்ட அப்பழுக் கற்ற உண்மையாகும். இதில் கற்பனைக்குச் சிறிதும் இடம் இல்லை. இப் பழமொழிகள் நம் வாழ்க்கைக்கு வழிகாட்டும் இயல்பின. மேலை நாட்டுப் பழமொழிகளுக்கு ஏற்ற தமிழ் மொழி பெயர்ப்பும், தேவை யான இடங்களில் விளக்கக் குறும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. ஆங்கிலத்தில் புலமை பெற இந்நூலும் தேவையே.

## 4. Dictionary of Quotations with Tamil Translation

**பொன்மொழிகள் அகராதி – தமிழ் மொழிபெயர்ப்புடன்**




பழமொழிகள் போலவே இந்தப் பொன்மொழிகளும் முன்னோர் அநுபவ மொழிகளே! அப்படியானால், பழமொழிக்கும் பொன்மொழிக்கும் உள்ள வேறுபாடு தான் என்ன என்ற கேள்வி எழும் அல்லவா? பழமொழி என்பது நெடுங்காலமாக வழங்கி வருவது; இந்தப் பொன்மொழிகள் பிற்காலத்தில் எழுந்தவை! மற்றபடி சிறப்பால் இரண்டும் உயர்ந்தவையே!

இத்தகைய பொன்மொழிகளைத் தாங்கி நிற்கும் இந்நூலும் ஆங்கிலப் புலமை பெறத் தேவைதான்!

## 5. Tamil – Tamil – English Dictionary

**தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி**




சங்க காலம் எனப்படும் தொன்மைக் காலம் முதல் தற்காலம் வரையிலான ஏராளமான தமிழ்ச் சொற்களுக்கு எளிய தமிழ்ச் சொற்களும் அவற்றிற்குரிய ஆங்கிலச் சொற்களும் உண்டு. அதனுடன் அமையாது, அந்தச் சொற்களை எப்படி வாக்கியத்தில் பயன்படுத்துவது என்பதனையும் விளக்குகிறது, இந்தத் தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி. மேலும் வீடு, கட்டிடங்கள், பறவைகள், நீர் வாழ்வன, ஒளி நிறக் கற்கள் ஆகியவற்றுக்கு உரிய ஆங்கிலச் சொற்கள் இந்நூலில் ஏராளமாக உண்டு.

## 6. Tamil – Tamil Dictionary

**தமிழ் – தமிழ் அகராதி**




உலகிலேயே பழம் பெருமை வாய்ந்த மொழிகளுள் முதன்மையாக விளங்குவது, தமிழ் மொழி. கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய மூத்த மொழி நம்மொழி எனச் சான்றோர் இதன் பழைமையைக் கட்டிக் காட்டி மகிழ்வர்! தாம் அறிந்த மொழிகளிலேயே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம் எனப் பூரிப்படைகிறார், பாரதியார். இப்படி ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வரும் நம் அருமை மொழியில் உள்ள சொற்களின் பொருளை எளிதில் அறிய முடிவதில்லை. இந்த அகராதி உங்கள் கையில் இருந்தால் பழந்தமிழ் இலக்கியச் சொற்களாயினும் பிற்காலச் சொற்களாயினும் யாவற்றிற்கும் இனிய எளிய பொருளை அறியலாம்.

**நூல் விவரம்:**

1. Dictionary of Synonyms and Antonyms
   ஒத்த கருத்துடைய சொற்கள் எதிர்ச்சொற்கள் அகராதி
2. Dictionary of Idioms and Phrases
   மரபுச் சொற்கள் — தொடர்கள் அகராதி
   தமிழ் மொழி பெயர்ப்புடன்
3. Dictionary of Proverbs
   பழமொழிகள் அகராதி — தமிழ் விளக்கத்துடன்
4. Dictionary of Quotations with Tamil Translation
   பொன்மொழிகள் அகராதி — தமிழ் மொழி பெயர்ப்புடன்
5. Tamil – Tamil – English Dictionary
   தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி
6. Tamil – Tamil Dictionary
   தமிழ் – தமிழ் அகராதி

| | |
|---|---|
| ஆறு நூல்களின் மொத்த விலை ரூ. | 500.00 |
| சலுகை ரூ. | 150.00 |
| சலுகை விலை ரூ. | 350.00 |

சலுகை விலையான ரூ.350 ஐ D.D. or M.O. மூலம் பின்வரும் முகவரிக்கு அனுப்புக. நேரிலும் பணம் செலுத்தி நூல் களைப் பெறலாம். புத்தகங்கள் அனைத்தும் உடனே V.P.P.மூலம் அனுப்பப்படும். வழக்கம்போல் தபால் செலவினை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக்கொள்க.

பணம் அனுப்பவேண்டிய முகவரி
VARTHAMANAN PATHIPPAGAM,
*ARR Complex, 141, Usman Road, T.Nagar, Madras-17*
*(Near Panagal Park) Phone:8257995.*

# தந்தி

கிருஷ்ணா

"பாட்டி சாக்லேட் எடுத்துக்கறேன்."

பரத்தின் குரல் பார்வதியம்மாளின் வீட்டு ஹாலிலிருந்து கேட்டது. பக்கத்து போர்ஷன்.

சாக்லேட்! "இனிப்பு கொடுக்கக் கூடாது. பிஸ்கெட், சாக்லேட்டெல்லாம் தராதீங்க."

டாக்டர் சொன்னது நினைவில் ஆடியது.

"பாட்டி இன்னொரு சாக்லேட்..."

"வேண்டாம்டா! உங்கப்பாவுக்குத் தெரிஞ்சா திட்டுவாரு."

பார்வதியம்மாளின் குரலில் கொஞ்சல் மட்டுமே தெரிந்தது. எனக்கு 'திக்'கென்றது.

"பரத்தை ஜாக்கிரதையாய் பார்த்துக்க. ஜுரம் அடிச்ச உடம்பு."

காலையில் டூட்டிக்குப் போவதற்கு முன் அவர் படித்துப் படித்துச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்.

இவனோ என்னிடம் ஒட்டவே மாட்டேன் என்கிறான். என்ன செய்வது நான்?

அப்பா இல்லாத நேரங்களில் பார்வதியம்மாளின் வீடே தஞ்சம் அவனுக்கு.

கடந்த மூன்று நாளாய் நல்ல ஜுரம் அவனுக்கு. நேற்று மாலை முதல்தான் பரவாயில்லை. உடனே வால்தனமும் ஒட்டிக் கொண்டு விட்டது.

குழந்தைகளின் இயல்பே அதுதானே!

எனக்கு இந்த இடமும் புதிது. அவரும் புதிது. மூன்று வயது பரத்தும் புதிது.

இரண்டாம் தாரம்! சென்ற திங்கட்கிழமைதான் திருமணம் நடந்தது.

வாழ்க்கையை அதன் போக்கில் வாழக் கற்றுக் கொடுத்த வறுமைச் சூழ்நிலை.

அதனால் வருத்தமோ, ஏக்கமோ மனத்தில் இல்லை. பக்குவம்?

ஒரு வயதில் தாயை இழந்த பிள்ளை பரத். அதனால் அதிக செல்லம். அடம், அழுகை கூடவே வளர்ந்து விட்டது இவனுடன்.

"குழந்தைக்காகத் தான் இந்தக் கல்யாணமே."

பெண் பார்த்த சமயத்திலேயே சொல்லி விட்டார்.

மற்றபடி, நல்ல மாதிரியாய் இருக்கிறார். பக்குவப்பட்ட மனிதர். அதிராத பேச்சு. என்னைத் தொடும்போது கூட காமத்தை விட பிரியமே தெரிகிறது.

துறுதுறுப்பான முகம் பரத்துக்கு. பார்த்ததுமே வாரிக் கொஞ்சி விட்டேன். அப்படியே இவர் ஜாடை.'

"பாட்டி ஃப்ரிட்ஜ் வாட்டர்."

"வேண்டாம்டா. என்னாலே சட்டுனு எழ முடியலியே."

"கொஞ்சூண்டு பாட்டி. அப்புறம் உன்னோட 'டூ' விட்டுடுவேன்."

விறைப்பாய் அவன் சொல்வது காதில் விழுந்தது.

"சரி, சரி. கால் தம்ளர் மட்டும் குடிச்சுக்கோ. சொன்னால் கேட்கமாட்டேங்கறியே."

இது பாட்டிகளுக்கே உரித்தான குணம்.

ஐயையோ! என்னால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. ஜுரம் அடித்த உடம்பு, ஐஸ் வாட்டர் குடித்தால் என்னாவது? சுடவைத்த நீர்தான்! டாக்டர் கடுமையாய் எச்சரித்திருக்கிறார்.

விடுவிடுவென கதவு தாண்டி உள்ளே நுழைந்தேன்.

சோபாவில் சாய்ந்தபடி வாரப் பத்திரிகையில் ஆழ்ந்தபடி பார்வதியம்மா.

ஃப்ரிட்ஜ் கதவைத் திறந்து தண்ணீர் பாட்டிலைக் கையில் பிடித்தபடி பரத். அருகில் தரையில் தம்ளர்.

"வைச்சுடு பாட்டிலை."

என் அதட்டலைக் கண்டு கொள்ளவில்லை அவன்.

வெடுக்கெனப் பிடுங்கி வைத்து, ஃப்ரிட்ஜை மூடினேன். இடுப்பில் அவனையும் தூக்கிக் கொண்டேன்.

கையையும், காலையும் உதறி 'ஓ'வென்று அழ ஆரம்பித்தான். செவிப்பறை வலித்தது.

"அதிகமா அழவிடாதே அவனை. மறுபடியும் ஜுரம் வந்துடப் போகுது. கொஞ்சம் தானே கேட்கறான்."

அவனுக்குப் பரிந்து பேசிய பார்வதியம்மாளை கடுமையாய்ப் பார்த்தேன்.

"என் குழந்தையை எப்படிப் பார்த்துக்கணும்னு எனக்குத் தெரியும்."

மடமடவென எங்கள் போர்ஷனுக்குள் நுழைந்து, கதவையும் சார்த்திக் கொண்டேன்.

அப்படிப் பேசியிருக்க வேண்டாமோ கடுமையாய்? 'அவங்க என் அம்மா மாதிரி' என்று இவர் சொல்லியிருக்கிறாரே? பரத்தின் முரண்டு அழுகை மேற்கொண்டு எதையும்

யோசிக்க விட வில்லை.

"மியாவ்."

பூனைக் குட்டி!

"பார்த்தியா நீ அழுததனாலே அதுவும் அழுது."

கொஞ்சம் பால் எடுத்து வந்து தட்டில் ஊற்றினேன்.

பூனை ஓடி வந்து ருசித்தது. பரத்தின் அழுகை சற்று குறைந்தது.

வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவன் கையில் பால் தம்ளரைக் கொடுத்தேன்.

ஒரு தம்ளர் பால் காலியானது. கூடவே அழுகையும் காணாமல் போனது.

பூனையைக் காண்பித்தே சாப்பாடு ஊட்டி, தூங்க வைத்தேன்.

நடுக்கதவைத் திறந்து வைத்தேன். பார்வதியம்மாள் 'வெடுக்'கென்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள். கோபம்! கொஞ்சம் பயமாயிருந்தது.



ஷிப்ட் முடிந்து மூன்று மணிக்கெல் லாம் அவர் திரும்பிவிட்டார்.

நினைத்தது போலவே ஆகிவிட்டது. வெளி கேட்டிலேயே பார்வதியம்மாள் பிடித்துக் கொண்டாள்.

கையை ஆட்டி ஆட்டி பேசுவதைக் கண்டு, நான் வீட்டுக்குள் பதுங்கினேன்.

பத்து முழு நிமிடம். மனசுக்குள் 'லப்டப்' வேகமாய் அடித்துக் கொண்டது.

முதல் சண்டை! இன்று அரங்கேறி விடுமோ?

உள்ளே வந்தார் அவர். முகத்தைப் பார்க்க பயந்து, அவரது பையை வாங்கிக் கொண்டு திரும்பினேன்.

"நில்லு."

குரலில் கடுமையோ, இல்லை, எப்போதும் போலத்தானோ?

அவர் முகம் பார்த்து நின்றேன், பட படப்பாய்.

"பார்வதியம்மாவிடம் என்ன சொன்னே?"

"அது.... ஃப்ரிட்ஜ் தண்ணி.... ஜுரம்....

திக்கினேன் வார்த்தை வராமல். கண்ணீர் வேறு முட்டிக் கொண்டு வந்தது.

"என் குழந்தையை எப்படிப் பார்த்துக்க ணும்னு எனக்குத் தெரியும்னு, சொன்னியா?"

அதட்டினார். தலையாட்டினேன்.

சட்டென நெருங்கி அணைத்துக் கொண்டார்.

"என் குழந்தை!' இது போதும், உன் னோட இந்தச் சொல்லே போதும், உன்னை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு."

இறுக்கிக் கொண்டார். பிரியமாய்.

## போட்டிக் கதை — 3

# திருமாமகள்

பஸ் திடீர் பிரேக் அடித்து நின்றது.

புத்தகத்தில் சுவாரசியமாய் மூழ்கியிருந்த நான் முன் கம்பியில் முட்டிக் கொள்ள எத்தனித்து, பின் அடிபடாமல் தப்பித்ததில் கால் மளுக்கிக் கொண்டது.

பஸ் கலகலக்க ஆரம்பித்து விட்டது.

"ப்ச்... என்னப்பா இது— இந்த மே மாசம் வந்தாலே இது ஒரு பெரிய ரோதனையாப் போச்சு..." அலுத்துக் கொண்டார் என் பக்கத்து சீட்டுக்காரர்.

"என்னாச்சுங்க?" என்றேன், அவர் முகம் ஆராய்ந்து.

"சாலை மறியல்... எல்லாப் பொம்பளைங்களும் ரோட்டுக்குக் குறுக்க உட்கார்ந்திட்டாங்க.. பாம் போட்டாத்தான் எழுந்துப்பாங்க.. தலைவேதனை சார்..." அலுத்துக் கொண்டே ஒரு சிகரெட் எடுத்துப் பற்ற வைத்தார்.

நானும் என் பங்குக்கு செய்தி திரட்ட பஸ்ஸை விட்டு இறங்கினேன்.

முன்னால் இருபது பஸ், பின்னால் இருபது பஸ், ஆட்டோ, கார் என்று ஆங்காங்கு நகர முடியமல் திண்டாடிக் கொண்டிருந்தன.

ரோட்டின் குறுக்கே ஈஸ்ட்மென் கலரில் பிளாஸ்டிக் குடங்கள், சிறுமியில் ஆரம்பித்துத் தொண்டுக் கிழவி வரை சம்மணம் இட்டு அமர்ந்து இருந்ததைப் பார்த்தால் அவர்கள் ஒரு தீர்மானத்துடன்தான் வந்திருப்பார்கள் என்பது புரிந்து விட்டது.

"பாருங்க... ஸார்... வருஷா வருஷம் இவங்களுக்கு இது வாடிக்கையாயிருச்சு... ஆய்.. ஊய்னா... எல்லா கண்றாவிக்கும் போராட்டம்.. ஓட்டுப் போட்ட மினிஸ்டரைப் பார்க்க வேண்டியதுதானே..." என்றார் ஒருவர்.

"தஞ்சை - திருச்சி ரோடு... முக்கியமான சாலை... ட்ராபிக் ஸ்தம்பிச்சு போச்சு... ஆபீஸுக்கு எங்க டயத்துக்கு போக முடியும்..." அலுத்துக் கொண்டார் இன்னொருவர்.

"நல்ல வேளையாய்.. அக்னி நட்சத்திரம் உக்ரத்தை காண்பிக்கலை.. மழை வரும் போல இருக்கு..." என்று அதே ஆள் சொல்ல, அதை ஆமோதித்தது போல் இடித்தது இடி. மின்னல் அந்தக் காலை நேரத்தில் கூட மெல்லிய இழையாய்த் தெரிந்தது.

படபடவென்று தூறல் விழ 'ஹோ'வென்ற சப்தத்துடன் எல்லா கூட்டமும் அவரவர் பேருந்தில் ஏறியது. சிலர் அக்கம் பக்கம் இருந்த டீக்கடை கூரைகளில் ஒடுங்க, டீ வியாபாரம் சுறுசுறுப்படைந்தது.

"ஸார்... வாங்களேன்... ஒரு டீ அடிக்கலாம்..." என்ற குரலுக்குரியவர் அதே சிகரெட் ஆசாமி. பஸ் நின்ற இந்த ஒரு மணி நேரத்தில் நன்கு பரிச்சயமாகி விட்டார்.

"எஸ்.. போலாமே, நீங்க.."

"நான் நரேந்திரன்.. பொதுத்துறை நிறுவனச்



துல இருக்கேன்... நீங்க...?"

"நான் இனம் தஞ்சாவூர் போறேன். அங்க ப்ரைவேட் கம்பெனில இருக்கேன்...

"பேர் சொல்லலையே..." என்றார்.

"கதிரேசன்..."

"பேம்... பேம்... பேம..." எனற சப்தத்துடன் போலீஸ் வேன் வந்தது.

"போலீஸ்... வந்தாச்சய்யா... இனி அடி நிமித்துடுவான்.. பின்ன பாருங்களேன். தண்ணி விட்டாச்சு. ஒழுங்கா யூஸ் பண்ணுதுங்களா... தெருவுக்குத் தெரு.. பைப்பை உடைச்சுட வேண்டியது... இவங்க அப்பன் வீட்டு சொத்து பாருங்க... குழாயத் திருடி விக்க வேண்டியது..." பக்கத்தில் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார் அவர் பாட்டில்.

"ஆமாம்... ஸார்.. இந்த ஏரியா.. ட்ரைதான்.. இல்லேங்கலே... அதுக்குனுட்டு மறியல் செஞ்சு... பொது மக்களை ஏன் துன்புறுத்தணும்? அவனவன் ஆயிரம் அவஸ்தைல வீட்டை விட்டுக் கிளம்பறான்..." என்றார் நரேந்திரன்.

பெண்கள் பஸ்ஸை விட்டு இறங்க முடியாமல் எட்டி எட்டி பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

**சு**த்தமாய் இரண்டு மணி நேரம் ஆகிவிட்டது.

ஒரு பஸ் டிரைவர் பஸ்ஸை ரிவர்ஸில் எடுக்க முனைந்த போது, 'பட்' என்று ஒரு கல் அந்த டிரைவரின் தலையை உரசியது. அதைத் தொடர்ந்து வேகமாய் ஒரு ஆள் வந்தவன் டிரைவரின் சட்டையைப் பிடித்தான்.

"ஏலே... பஸ்ஸை எடுக்கறியா... மாசம் பொறந்தா சம்பளம் வாங்கற திமிரு... எங்க கஷ்டம் புரியலை யாய்யா ஒனக்கு... வெளிய இருந்தா அலம்ப தண்ணி இல்ல... தெரியுமா... வெள்ளைக்காரன் மாதிரி துடச்சுக்க முடியுமா..

# மறியல்



> • ஒரு கொத்து கறிவேப்பிலையை நன்றாகக் கசக்கி, சாப்பிடும் இடத்தில் வைத்தால், அந்தப் பக்கம் ஈக்களே வராது. வாடிவிட்ட கொத்து மல்லியை வெதுவெதுப்பான தண்ணீரில் போட்டால், அப்போது பறித்தது போல் பச்சைப்பசேல் என்று ஆகிவிடும்.
>
> — பா. குணா

அம்மை போட்ட புள்ளைக்கு ஒவ்வொரு வீட்லேந்தும் ஒரு லோட்டா தண்ணி குடுக்க றோம்யா.. ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரம் பஸ்ல உக்கார கஷ்டமா இருக்குதுல்ல.. வருஷம் முழுக்க தண்ணி இல்லாம நாங்க கஷ்டப்படறதை விட இது என்ன கஷ்டம்.. பஸ்ஸை எடுத்த.." ஆள்காட்டி விரலால் மிதியைப் பேசினான் அந்த ஆள்.

டிரைவர் விதிர்விதிர்த்து பஸ்ஸை விட்டு இறங்கினார்.

"எஸ்.ஐ. வந்தாச்சப்பா.." என்றார் நரேந்திரன்.

பதினைந்து நிமிடங்களாய் பேசிப் பயனில்லாமல் அவரும் ஜீப்பில் வந்தமர, இப்போது எல்லோருக்கும் கவலை கலந்த சுவாரசியம் ஏற்பட்டது - நான் உட்பட.

"டி.எஸ்.பி. வந்தாலும் நகர மாட்டாங்க போல.." சொன்ன நரேந்திரன் டிபன் பொட்டலத்தைப் பிரித்துச் சாப்பிட ஆரம்பித்தார்.

இதற்குள் சில பெண்கள் இயற்கையின் உபாதைக்கு அங்கிருந்த வீட்டுக்குள் தயக்கமாய் நுழைந்தது எனக்குப் புரியாமல் இல்லை.

"பாவம்.. ஸார்.. லேடீஸ்.. யாரைச் சொல்ல முடியும்.. இவங்க செய்யறது.. கரெக்டுன்னாலும்.. பொது மக்கள் என்ன செய்வாங்க?" என்றார் நரேந்திரன்.

வரிசையாய் மூன்று ஆயுதம் தாங்கிய போலீஸ் வேன்கள் வரவும் மிகவும் பரபரப்பு ஏற்பட்டது.

"போலீஸின் அராஜகம்.. ஒழிக.. தண்ணீர் பிரச்னையைத் தீர்க்காத எங்கள் தொகுதி எம்.எல்.ஏ. ஒழிக.." கோஷம் வானைப் பிளந்தது.

படபடவென மீண்டும் தூறல் வலுத்தது.

நாங்கள் பஸ்ஸில் ஏறினோம்.

இப்போது அந்தப் பெண்களுக்குக் குடைகள் வழங்கினார்கள், அவரவர் வீடுகளிலிருந்து.

"ம... குடிங்கோ.." என்று ஒரு பெண் ஒரு பெண்ணிற்கு மோர் ஊற்றிக் கொடுத்தாள்.

"எல்லாம்... பஸ்ல ஏறுங்கப்பா.. கலெக்டர் வரப் போறாரு.. என்ன வேடிக்கைப்பா. அடுத்தவன் விஷயம்னா.. மூக்கு நீண்டுருமே.." என்றார் ஒரு போலீஸ்காரர்.

நான் பஸ்ஸிலிருந்து தலைநீட்டிப் பார்த்தேன்.

குடையை விரித்து சிரத்தையாய் அமர்ந்திருந்தார்கள் அந்தப் பெண்கள்.

"சே.. வீட்டுக்கும் திரும்ப முடியாது. ஆபீஸுக்கும் அரை நாள் லீவு போடணும்.. யாரு மூஞ்சில முழிச்சனோ..." என்றார் நரேந்திரன்.

மீண்டும் அரை மணி நேரம் அரசியல், சினிமாவில் ஓடி விட பஸ் உறுமும் சத்தம்.

ஒருவர் பஸ்ஸில் ஏறினார்.

"விஷயம் தெரியுமா.. கலெக்டரு.. எதுனாச்சும் இவங்க கலாட்டா செஞ்சா... ஃபயரிங் செய்யச் சொல்லி ஆர்டர் குடுத்துட்டாரு.. என்ன அதிசயம்.. ரோட்டுல ஈ, காக்கை இருக்கணுமே.. செம.. ஜோக்டா.." என்றதும் எனக்குள் ஏதோ நெருடியது.

தண்ணீரை திறந்து விட்டுக் கொண்டு, கையில் நியூஸ் பேப்பருடன் வசதியாக இயற்கையின் உபாதையிலிருந்து விடுபட்டு, கண்ணாடியைப் பார்த்தவாறே பல் தேய்த்து, பைப்பை திறந்து விட்டது பற்றி யோசிக்காமல் ப்ரஷ் செய்து, ஷேவ் செய்து, தண்ணீரின் அருமை எப்படித் தெரியும், தண்ணீர் பிரச்னை இல்லாதவர்களுக்கு!

நாளை கொட்டை எழுத்தில் செய்தி வரும். திருச்சி - தஞ்சை ரோட்டில் புரட்சிப் பெண்கள் தண்ணீர் வேண்டி சாலை மறியல் என்று. அவர்களின் பிரச்னை தீரப் போவது என்னவோ நிச்சயம் கிடையாது. ஆனால் நான்கு மணி நேர வம்புகள், வேடிக்கைகளில் எங்களுக்குப் பொழுது போயிருக்கலாம், பத்திரிகைகளுக்குச் செய்தி கிடைத்திருக்கலாம்; தெருவோர டீக்கடைகளுக்கு உற்சாகமான வியாபாரம் ஆகியிருக்கலாம்.

இதோ என் பஸ்ஸும் கிளம்பி விட்டது.

"வறுத்துட்டாங்கப்பா... போர்.. எவ்ளோ நாழி உட்கார்ந்திட்டிருக்கறது.." என்றார் நரேந்திரன்.

பஸ்ஸிலிருந்து பார்த்தேன்.

சோனியாய் ஒரு குழந்தை இயற்கை உபாதையைத் தீர்த்துக் கொண்டிருக்க, அதன் அம்மா அதை வேறு ஒரு இடத்தில் உட்கார்த்தினாள்.

மழைத் தண்ணீர் சிறு குட்டையாய் கொசு முட்டைகளுடன் தேங்கியிருக்க, அதில் குழந்தையை அமிழ்த்தி பின்புறம் கழுவினாள்.

"அப்பாடா.. இனி பிரச்னை இருக்காது.." என்றது ஒரு குரல் பஸ்ஸிலிருந்து.

"நம் பிரச்னை தற்காலிகம்.. ஆனா இவங்க.. பாவம்ங்க.." என்ற என்னை நமட்டாய்ப் பார்த்தார் நரேந்திரன்.

அந்தக் குழந்தை என் கண்முன் வந்து போனது.

"நாசமாப் போற அரசியல்வாதிங்க.. அடுத்த எலெக்ஷனுக்கு இந்தப் பக்கம் வரட்டும்.." ஒரு பெண்மணி கத்திக் கொண்டிருந்தாள்.

"வே...வே...வே..." என்று எல்லா போலீஸ் வேனும் புறப்பட்டு விட அங்கே புயலுக்குப் பின் அமைதிதான் இருக்கும், வேறென்ன?



# திருமகள்

புதிய கிளைகள் திறப்பு விழா

அக்டோபர் 3 முதல்

## பாரிமுனை

160, தம்பு செட்டி தெரு, சென்னை - 1.

மற்றும்

## புரசைவாக்கம்

89/12, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, டவுட்டன், சென்னை - 7.

## குரோம்பேட்டை

செப்டம்பர் 11 முதல் செயல்படுகிறது

S.R.S. காம்பளக்ஸ், புதிய எண் : 52, G.S.T. ரோடு, சென்னை-44.

C.M. கல்யாண மண்டபம் எதிரில்




**திருமகளில் திருவிழா 30 நாட்கள்**

செப்டம்பர் 7 முதல் அக்டோபர் 6 வரை

தலைமை அலுவலகம் மற்றும் கிளைகளில்

# 25% + 5%

வட்டி ஊக்கத்தொகை

## THIRUMAGAL LEASING

Head Office : 9, Ramanathan Street, T.Nagar, Madras - 17. Ph : 434 74 08

Branch : 194, V.V.P. Building, Anna Salai, Thiruvarur, Ph : 22906.

திருமகள்.. உங்கள் வீட்டுப் பொன்மகள்

Working Hours : 10.00 A.M. to 6.30 P.M. Sundays : 10.00 A.M. to 1.00 P.M.

SPRINGHEAD

# 25

அந்த மலை அமைதியாய் மிகப் பெரிய மாறுதலுக்குத் தயாராகிக் கொண்டிருந்தது. மலை ஒரு சோம்பலான இடம். நகரத்து பரபரப்போ, ஆர்ப்பாட்டமோ இல்லாத இடம். கிராமங்களில் அவ்வப்போது ஏற்படும் ரகளை கூட மலையில் ஏற்படுவது இல்லை. பண்டிகையின் உற்சாகம் எதுவும் மலையில் தென்படாது. அரசியல் தலைவர் மரணமோ, ஆட்சி மாற்றமோ இங்கு பெரிய தாக்கத்தை உண்டுபண்ணி விடாது. அந்த மலைப் பகுதி சுற்றுலா இடம் அல்ல. அதனால் அங்கு எந்த விஷயமும் பெரிய பதற்றத்தை உண்டாக்காது.

ஆனால் அந்த மலை இன்று பதறித் துடித்தது. குப்பை என்று வர்ணிக்கப்பட்ட காப்பிக்கு மிகப் பெரிய அந்தஸ்து வரப் போகிறதாய் பத்திரிகைகள் சொல்லின. பிரேசில் தேசத்தில் மாதிரிக்குக் கூட காப்பிப் பழம் இல்லை. காற்றில் பரவும் வைரசால் செடி தாக்கப்பட்டது. எத்தனை தடுப்பு மருந்து போட்டும் பயனில்லை என்று விவரித்தன. பிரேசிலினுடைய கொட்டத்தை அடக்குவதற்காகவே நடந்த அமெரிக்க சதி என்று கூட யாரோ அறிக்கை கொடுத்திருந்தார்கள். பிரேசிலில் சுத்தமான காப்பி இல்லை என்றதும் கென்யா மிக வேகமாகத் தன் விலையை ஏற்றியது. கென்யா அரசாங்கமே மிக கவனமாய் வியாபாரம் நடத்தியது.



இந்தியாவில் அரசாங்கம் என்பது மறைமுகமான தன்மையில் வியாபாரிகள்தான். அரசியல்வாதிகள் எல்லோரும் வியாபாரியின் பிரதிநிதிகளாக இருந்தார்கள். அரசாங்கம் அரசியல்வாதிகளின் உத்தரவால் இயங்கிக் கொண்டிருந்தது. எனவே அரசு இயந்திரம் விழிப்பதற்கு முன்னரே வியாபாரிகள் விழித்துக் கொண்டனர். கூர்க் நோக்கிப் படையெடுத்தார்கள்.

ஆனால் அந்தப் பகுதி காப்பிக்கு கொஞ்சம் மரியாதை இருந்தது. ஓரளவு கவனத்தோடு அங்கு பயிர் பராமரிக்கப்பட்டிருந்தது. எனவே கேரளா, தமிழ்நாடு பார்டர் பக்கம் வியாபாரிகள் இறங்கினார்கள். போடிநாயக்கனூர்தான் இதற்கு மிக வசதியாக இருந்தது. ஏற்கெனவே அங்கிருந்து வியாபாரம் செய்யும் பணியாட்கள் மிரண்டு போகும் அளவுக்கு வடக்கே இருந்து ஆட்கள் வந்தார்கள். காப்பிக் கொட்டை கொள்முதல், காப்பித் தோட்டம் வாங்குதல் என்று பறந்தார்கள்.

கதிரேசன் எஸ்டேட் வாங்கிய பத்தாவது நாள் ஒரு ஏக்கர் காப்பி எஸ்டேட் அம்பதாயிரம் ரூபாய்க்குப் போயிற்று. அதற்கு அடுத்த நாள் அறுபதாயிரம் ரூபாய் என்று பேசப்பட்டது. வேறொரு மிகப் பெரிய எஸ்டேட் எழுபத்தி அஞ்சாயிரம் என்று கைமாறியது. மலையில் உள்ளவர்கள் மூச்சடைத்துப் போனார்கள்.

ஏலத்தை விட காப்பி விலையா என்று அதிசயத்தார்கள். அம்மாவை விட வேலைக்காரிக்கு மதிப்பா என்கிற மாதிரியான கேள்வி அது. ஆமாம் என்று காலம் பதில் சொல்லியது.

ஆறுமுகமும், ஜெயந்தியும் ஹிண்டு பேப்பரை தரையில் பரப்பி குப்புற கவிழ்ந்து கொண்டு படித்தார்கள்.

“பதினாறு வருஷம், போன மாசத்தோட. வனவாசம் மாதிரி ஆகிப் போச்சு மலைக்கு வந்து. கையகல நிலம்

# என்றுயிரும் நீயில்லையோ

வாங்க முடியலை. குளிர் காத்தும், பூச்சிக் கடியும், கொட்டுற மழையும்தான் கண்ட பலன். எவன், எவனோ எங்கிருந்தோ வந்து இங்க நிலம் வாங்குறான். நம்ம இடம்னு இருந்துக்கிட்டு நம்மால நிலம் வாங்க முடியலை. பெரிய எஸ்டேட் வாங்க வேணாம்... ஒரு அஞ்சு ஏக்கர் நிலம் வாங்கலாம் இல்லை. காப்பியோ, ஏலமோ, யானைப் புல்லோ நமக்குன்னு ஒரு நிலம் வாங்கிப் போட லாமில்லை."

"வாத்தியார்ங்ககிட்ட அவ்வளவு பணம் ஏது. தரையில இருந்தா வாங்குற சம்பளம் பத்துத் தேதிக்கே பறந்து போயிடும். மலையில இருக்கிறதனால மரியாதையா ஓடுது. உன்னைய கல்யாணம் பண்றதுக்காக மலைக்கு வந்தேன். மறுபடியும் தரைக்குப் போக முடியுமா? வேறெந்த பைத்தியக்காரன் இந்த மலைக்கு வருவான். தரையில இருந்தா பத்து டியூஷன் சேரும். சாவிடாதுட்டு பார்க்கலாம். மலையில பசங்க பள்ளிக்கூடத்துக்கே வர மாட்டேன்றாங்க."



"மலைக்கு வந்ததுக்கு நொந்துக்கிறீங்களா, என்னைக் கல்யாணம் பண்ணதுக்கு நொந்துக்கிறீங்களா?" ஜெயந்தி கடுகடுப்புடன் கேட்டாள்.

"நான் நொந்துக்கலை. எனக்கு திருப்தியா இருக்கு வாழ்க்கை. மரியாதையான வேலை. நல்ல பொண்டாட்டி. தோட்டத்தோட ஒரு ஓட்டு வீடு. ஆணும் பொண்ணுமா ரெண்டு பசங்க. எனக்கு எஸ்டேட் ஓனரா ஆவணும்ன்ற ஆசையே இல்லை."

"எனக்கிருக்கு. என் பசங்க நான் பட்ட கஷ்டத்தைப் படக்கூடாது. என்னை மாதிரி கட்டின துணியோட ஓடி வரக் கூடாது. அதுவும் தவிர இந்த ஆளைக் கட்டிக்கினு இன்னாடி அனுபவிச்சே? அப்படின்னு தரையில கேப்பாங்க. அப்ப பசங்களைக் காட்டினா போதுமா. எஸ்டேட் காட்டணும், எஸ்டேட் ஓனர்னு காட்டணும்."

"இந்த வீடு வாங்கவே ஏழு வருஷம் ஆச்சு ஜெயந்தி நமக்கு."

அது கருங்கல் கட்டடம். ஓய்வு பெற்ற ராணுவ அதிகாரி கட்டியது. மேலே மங்களூர் டைல்ஸ், உள்ளே ஓட்டு ஓடு. லட்சத்தி பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கி, கடனை மெல்ல மெல்ல அடைத்தார்கள். ஓய்வு நேரங்களில் ஏலக்காய் எஸ்டேட்டில் கணக்கெழுதியும் கமிஷன் ஏஜெண்டாக வேலை செய்தும், மதுரையிலிருந்து புடைவை, ரவிக்கைத் துணிகள் கொண்டு வந்து, மலையில் விற்றும், கவரிங் நகைகள் கடன் கொடுத்தும் காசு சம்பாதித்தார்கள். அதில்தான் கடன் அடைத்தார்கள். அந்த மலையில், அந்த பள்ளிக் கூடத்தில், எட்டாவது தாண்டி யாரும் படிக்கவில்லை. அங்கு எட்டாவது படித்தவனுக்கும் கொஞ்சம் தட்டுத் தடுமாறி தமிழ்தான் படிக்க வேண்டி வருமே ஒழிய ஆங்கிலம் வராது.

ஜெயந்தியும் ஆறுமுகமும் தங்களிடமிருந்த ஆங்கிலத் தன்மையும் இழந்து, ஆசிரியத் தன்மையும் இழந்து, மலைவாசத் தொழிலாளி போல் மாறினார்கள். காசு சம்பாதிப்பதே வாழ்க்கையின் முக்கிய நோக்கமாகக் கொண்டார்கள். எப்பாடுபட்டாவது ஒரு

பாலகுமாரன்

சுமாரான காப்பி தோட்டம் வாங்கியிருந்தால் இன்று அதை விற்று ஏலம் வாங்கியிருக்கலாம். ஆனால் என்ன செய்வது, எப்படி வாங்குவது என்றுதான் தெரியவில்லை.

"செட்டியார் புள்ளை கதிரேசன் எவனோ, குண்டுகட்டையா ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டானாமே, பகவதி ஆடிப் போய்க் கிடக்கிறாளாமே. இன்னா டான்னு பகவதி கேட்டதுக்கு நீ இன்னா ஒழுங்கான்னு கேட்டுட்டானாமே, அத்தோட நிக்கலை. எல்லா விவரமும் தெரிஞ்சவன் மாதிரி பெரிய தொகை இறக்கி நாப்பத்தி ரெண்டு ஏக்கர் காப்பி வாங்கிட்டான். மிச்சம் ஒரு பெரிய தொகை கொடுக்கணுமாம். அதனால கையில இருக்கிற எஸ்டேட்டை விக்கப் போறான். அவனைப் பார்த்துட்டு நிறைய பேர் ஏலத்தை விட்டுட்டு காப்பிக்குப் போறாங்க. அவசரத்துக்கு விக்கிறதனால ஏலம் பிடிமானமா விலை போகும். பின்னாடி கப்புன்னு விலை உயரும். நீ தாலிக் கொடி வரைக்கும் வித்து ஏலம் வாங்கு அது நல்லது." வெளியே யாரோ சொன்னார்கள்.

அவர்கள் சொன்னது கேட்டு ஆறுமுகமும், ஜெயந்தியும், நகை மதிப்புப் போட ஆரம்பித்தார்கள். மூன்று ஏக்கர் கூட வாங்க முடியாது என்று சோர்ந்து போனார்கள்.

"இந்த வாத்தியார் உத்தியோகத்துல லோல் படறதவிட போடி சந்தையில மூட்டை தூக்கிப் பிழைக்கலாம்." பள்ளிக்கூட கொத்துச்சாவி எடுத்துக் கொண்டு ஆறுமுகம் அன்றைய பொழுதை கழிக்கப் போனான்.

கதிரேசனைத் தேடி பல பேர் வந்தார்கள். 'காப்பி எஸ்டேட் வாங்கினியாமே, கூடத் தரேன் கொடுத்திர்றியா?" என்று கேட்டார்கள்.

"பேலன்ஸ் வைச்சுருக்கியாமே, அதை நாங்க அடைச்சுடறோம். உனக்கு ஒரு அமௌண்ட் தரோம். எஸ்டேட் பாதி பாதியா பிரிச்சுக் கலாம்." பெரிய சூட்கேஸ் நிறைய பணம் கொண்டு வந்து பிரித்துக் காட்டினார்கள்.

வெளி ஆட்கள் யாரோ பேச வந்த போது, சொர்ணலட்சுமி சமையல் கட்டில் சாப்பிட உட்கார்ந்தாள். பகவதிக்கு அவள் உரிமை வெறுப்பைக் கொடுத்தது. ஆச்சி தன்னைக் கேவலமாகச் சொல்லி விடுவாளே என்ற பயம் பதைபதைக்க வைத்தது.

சொர்ணலட்சுமியின் தட்டைப் பிடுங்கிக் கொல்லைப்புறம் வீசினான். அவள் முதுகில் அறைந்து கொல்லைப்புறம் தள்ளினான்.

"என்னை எதுக்கு அடிக்கிறீங்க?" எரிச்சல் தாளாது சொர்ணலட்சுமி கத்தினாள்.

"அடிக்கிறதா. வெட்டிக் கூறுபோட்டுரு வேன். நான் ரெண்டாந்தாரமா இருந்தாலும் ரொம்ப மரியாதையான குடித்தனக்காரிடி. எனக்குக் குழந்தைங்க கிடையாது. இந்த நாப்பது ஏக்கர் சொத்தை நான் மூத்தாள் குழந்தைங்களுக்காகத்தான் கட்டிக் காப்பாத்த வந்தேன். இதை நீ கொத்தினு போறதுக்கு வுட மாட்டேன்டி." கன்னத்தில் அறைந்தான்.

கதிரேசன் சொர்ணலட்சுமியை விலக்கி, கூட்டிக் கொண்டு போனான். அவளைப் பெட்டி படுக்கையோடு காரில் ஏற்றி பள்ளிக் கூடத்துக்கு அருகேயிருந்த ஆறுமுகம் - ஜெயந்தி வீட்டிற்குக் கூட்டிப் போனான்.

"தம்பீ வாங்க, வாங்க. ஜெயந்தி, யார் வந்துருக்காங்க பார்!" ஆறுமுகம் தடாலடியாய் வரவேற்க, ஜெயந்தி வாரி சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

"நான் இந்தப் பொண்ணை விரும்புறேங்க. இவ பேர் சொர்ணலட்சுமி. இது எங்க சின்னம் மாவுக்குப் புடிக்கலை. அவங்க லவ் பண்ணி கல்யாணம் பண்ணவங்கதான். ஜாதி விட்டு ஜாதி சம்பந்தம் பண்ணவங்கதான். எங்க அப்பா, எங்க அம்மா எல்லாரும் அவங்களை ரொம்ப மரியாதையா நடத்தினாங்க. ஆனா அவங்களுக்கு மரியாதையா எங்களை நடத்தத் தெரியலை. என்னை ரொம்ப சின்னப் பையனாகவே நடத்துறாங்க."

"அடேடே ஏன் அப்படி?" ஆறுமுகமும் ஜெயந்தியும் கதிரேசனுக்கு அனுசரணையாய் வியந்தார்கள்.

"இந்தப் பொண்ணைப் போட்டு அடிச்சு ரொம்ப ரப்சர் பண்றாங்க."

"அப்படியா! பகவதி ரொம்ப நல்ல லேடி யாச்சே..." யார் பக்கமும் உரசாமல் ஆறுமுகம் பேசினான்.

---



திருடன் 1 : தொழிலை விட்டுட்டதாச் சொன்ன நீங்க மறுபடியும் ஆரம்பிச் சிட்டீங்களே...?

திருடன் 2 : இன்ஸ்பெக்டர்தான், 'மறுபரிசீலனை செய்... மறுபரிசீலனை செய்...'னு நச்சரிச்சார்!

- சீர்காழி வி.ரேவதி



## குருவும் சிஷ்யனும்!

ஒரு குருவிடம் சிஷ்யன் கேட்டான்.

"குருவே, நல்லது கெட்டது இரண்டையும் இறைவன் தானே படைத்தார். நாம் நல்லது செய்யாமல் கெட்டது செய்தால் என்ன?"

குரு இதைக் காதில் வாங்கிக் கொண்டு பதில் பேசாமலிருந்தார்.

பிறகு இரவில் அனைவரும் பால் சாப்பிடும் நேரம் வந்தது.

குரு வேலையாளிடம் தன்னிடம் கேள்வி கேட்டவனைச் சுட்டிக் காட்டி அவனுக்கு மட்டும் பசுவின் சாணத்தையும் மற்றவர்க்கு பசும் பாலும் கொடுக்கும்படி உத்தரவிட்டார்.

இதைக் கண்ட சிஷயன் குருவிடம் எனக்கு மட்டும் சாணம் மற்றவர்க்கு பசும் பால் தருகிறீர்களே? இது நியாயமா என்று கேட்டான்.

அதற்கு குரு "சாணமும் பசுதான் கொடுக்கிறது. பாலும் பசுதான் கொடுக்கிறது. அதனால் நீ சாணத்தைச் சாப்பிட்டால் என்ன?" என்று கேட்டார்.

சிஷ்யன் தன் தவறை உணர்ந்து வெட்கத் தால் தலை குனிந்து நின்றான்.

- இலங்கை வானொலியில் கேட்டது:
**எஸ்.எல்.சுப்ரமணியம்.**

---

"எனக்கு ஒரு உதவி செய்யணும், காப்பி எஸ்டேட்டுல இவங்களை குடிவைக்கிறதுக்கு முன்னாடி உங்க வீட்டுல காபந்தா ஒரு பத்துப் பதினைஞ்சு நாள் வைச்சுக்கணும். நீங்க லவ் பண்ணி மலைக்கு வந்தவங்க. தாலி கட்டி ஜெயிச்சு காட்டினவங்க. ஒரு தாய், தந்தை மாதிரி என் வருங்கால மனைவியை நீங்க பாதுகாக்கணும். இதுக்கு நான் நன்றியோட இருப்பேன்."

"வுடுங்க. கவலையை வுடுங்க. இனி எங்க மகள். நாங்க பெத்த பொண்ணு. எங்களைத் தாண்டி இவளை யாரும் ஒண்ணும் பண்ணிட முடியாது. இந்த இருபதாம் நூற்றாண்டில் ஜாதி என்ன, மதம் என்ன! இதே இந்த சொர்ணலட்சுமிகிட்ட நானூறு சவரன் நகையும், நாப்பது ஏக்கர் எஸ்டேட்டும் இருக் கட்டும், புடைவையை மேல போத்திகிட்டு உள்ள கூப்பிடுவாங்க. நிஜமாவே நீ சொர்ண லட்சுமிதான்னு வழிச்சு நெட்டி முறிப்பாங்க. நாங்க பாத்துக்கறோம்."

ஜெயந்தியின் மனப் போக்கை ஆறுமுகம் புரிந்து கொண்டான்.

"அம்மா சொர்ணலட்சுமி, நாங்க ஏழைங்க தான். வெட்டிப் போட்டுருவாங்கன்னு பயந்து பதினாறு வருஷத்துக்கு முன்னாடி குடிவந் தோம். கையகலம் வூடு. ரெண்டு வேலைச் சோறு, உடுத்திக் கட்ட ரெண்டு ஜதை துணி இவ்வளவுதான் சம்பாதிச்சோம். காலையில காதல்னு கல்யாணம் பண்ணிக்கிட்டு, சாயந் திரம் மாமியார் வீட்டுக்குப் போய் இருவது சவரன் நகை போடுன்னு எனக்கு கேக்கத் தெரியாது. ஜெயந்தி என்னை நம்பி வந்த பொண்ணு.. அது யாராலயும் கண்ணு கலங்க கூடாதுன்றதுதான் என் கொள்கை. பதினாறு வருஷமா ஜெயந்திய ஒரு சொல் சொன்ன தில்லை."

"எனக்கு அது போறுங்கறேன்." புருஷ னுக்கு ஆதரவாய் ஜெயந்தி பேச ஆரம்பித்தாள்.

"ஊர் மரியாதைக்கு ஆசைப்பட்டு மாமி யார், நாத்தனார்னு இடிபடறதை விட இப்படி ஒதுக்குப்புறமா இருந்து, நம்ம காட்டுக்கு நாமளே ராணியா இருக்கலாம். எப்பனா தோணும், தோணாத இருக்காது. நிலமும், நீச்சுமா, சொத்தும், பத்துமா இருக்க ஆசை வரும். இங்கே எல்லாம் புருஷன்தான்னு அடக்கிக்குவேன். நீங்க போய் உங்க வேலையைக் கவனிங்க. சொர்ணலட்சுமி என் வயித்துல பொறக்காத பொண்ணு."

கதிரேசன் மிகுந்த நிம்மதியோடு அவர்கள் வீட்டை விட்டு வெளியே வந்தான். இந்த அன்புக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று மனத்தில் நினைத்துக் கொண்டான்.

வண்டிக்குள் உட்கார்ந்த போது, மறுபக்கம் யாரோ குனிந்து பார்த்தார்கள்.

"ஒரு நிமிஷம் தம்பி. எனிக்கி இப்படி மோசம் பண்ணுவியா. தம்பி மேலே எத்தனை பிரியமாயிட்டு நான் இருந்தது." குனிந்து பேசிய நாராயணன் கையை, கதிரேசன் எட்டித் தொட்டான்.

"உள்ள வந்து உட்கார். உன் கூட பேச ணும்னு ரெண்டு மூணு தடவை ட்ரை பண் ணேன். நீ அவுங்க பக்கம் சேர்ந்துட்டியோன்னு

## 19.9.1995 முதல் எங்கும் கிடைக்கும்!




# தங்கமான எண்ணெய்
# தரமான எண்ணெய்
# உள்ளத்திற்கு
# ஊக்கம் சேர்க்க
# உட்கொள்ளுங்கள்!

# பாம்பன்

- சூப்பர் ரீஃபைன்ட் சூரியகாந்தி எண்ணெய்
- சூப்பர் ரீஃபைன்ட் கடலை எண்ணெய்

15 கிலோ, 5 லிட்டர், 2 லிட்டர், 1 லிட்டர் மற்றும் $1/2$ லிட்டர் அளவுகளில் எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்.






CANVAS/POM/5003/95-96

A unit of Balu Jewellers group




Manufactured by:
**PAMBAN OIL MILLS PRIVATE LIMITED**
72, Usman Road, T. Nagar, Madras - 600 017. Ph: 4343377, 4343030

ஒரு அச்சம்."

"நான் கூலிக்கு வேலை செய்யறவன். நான் யார் பக்கம் சேருவேன். யார் கூட கூலி தராங்களோ அவங்களோடதான் ஒட்டுவேன். உங்கப்பா கூலி மட்டும் கொடுக்கலை. நாச்சியப்ப செட்டியார் கூலியோட மரியாதையும் கொடுத்தார். எஸ்டேட்ல வேலை செய்யுற முப்பது, நாப்பது பேர் என்னை மதிக்கணும்ங்கறதுக்காக எங்கூட மட்டும்தான் பேசுவாங்க. நான் என்ன சொல்றனோ அதான் செய்வாங்க. முதலாளி மேஸ்திரி பேச்சைக் கேட்டாத்தான் மேஸ்திரி பேச்சை மத்த கூலி ஆள் கேட்பான். நீ காப்பி எஸ்டேட் வாங்கினது எனக்கு வருத்தம். எனக்கு காப்பி வேலை தெரியாது. ரெண்டுத்துக்கும் நீ ஒரே முதலாளியா இருந்தாலும் தனித்தனியா மேஸ்திரி போட்டுத்தான் ஆகணும். காப்பி மேஸ்திரி, ஏலம் மேஸ்திரின்னு பிரிஞ்சுதான் ஆகணும். இது எனக்கு மரியாதைக் குறைவு. இதே நீ இன்னொரு இருவது ஏக்கர் ஏலக்காய் வாங்கியிருந்தா இன்னும் பத்து ஆளை நான் வேலைக்குச் சேர்த்திருப்பேன். நாப்பது ஆளுக்கு மேஸ்திரியா இருந்திருப்பேன். அறுபது ஏக்கர் நிலத்துக்கே மேஸ்திரின்னா, மலையில யூனியன் ஆளுங்கெல்லாம் கூட மரியாதையா பாப்பாங்க. இத்தினி நான் விசுவாசத்துக்கு எனக்கு ஒண்ணுமில்லாம பண்ணிட்டீங்க."

"விசுவாசம் என்பது ஏலக்காய் பறிக்கறது மட்டும்தானா?"

"வேறென்னா செய்யணும்?"

"முதலாளி எந்த ஆபத்திலிருந்தாலும் காப்பாத்தணும்."

"நான் காப்பாத்த மாட்டேன்னு சொல்லலியே. இப்ப நடக்கிறது குடும்பச் சண்டை. உன் மேலே பிரியப்பட்டுத்தான்ள உன் சின்னம்மா கோவிக்குது."

"எனக்கு இஷ்டப்பட்ட பொண்ணைத்தான் நான் கல்யாணம் பண்ணிக்கிடுவேன். இன்னொருத்தர் அபிப்ராயம் இங்கு முக்கியமில்லை. சரிதானா?"

"சரிதான்."

"காதலுக்கு ஜாதி முக்கியமா?"

"அது எதுக்கு?"

"காசு பணம் முக்கியமா?"

"மனசுக்குப் புடிச்சிருந்தா மத்த எல்லாம் மட்டந்தான்."

"நான் காப்பி வாங்கினது ஒரு எதிர்ப்பு தெரிவிக்கறதுக்கு. என்னால தனியா நிக்க முடியும். சுயமா தொழில் பண்ண முடியும்னு எல்லார்கிட்டேயும் காட்டறதுக்கு. குறிப்பா எங்க பங்காளிகளுக்குக் காமிக்கறதுக்கு. லட்சுமண செட்டியார்னு ஒருத்தர் வந்தாரே அவர் அப்பாவ ரொம்பப் படுத்தினார். அம்மாவ மிரட்டினார். எஸ்டேட் எங்களுக்குச் சொந்தம்னு எங்கப்பா செத்த அன்னிக்கு சத்தம் போட்டார். பகவதியம்மா முட்டாள். என்னைக் குழந்தைன்னே நினைக்கிறாங்க. அவங்க மேல ரொம்ப மரியாதை. ஆனால் எங்கப்பா தொழிலையே நான் செய்யணும்னு என்ன அவசியம்? நாச்சியப்ப செட்டியாரல தான் நான் நல்லாயிருக்கேன்னு எதுக்காக நான் பேர் வாங்கணும். காப்பி விலையேறும்னு நான் மலைக்கு வந்த அன்னிக்கே எனக்குத் தெரியும். ஆனா இத்தினி விலை ஏறும்னு எனக்குத் தெரியாது. இந்த மண்ணைத் தொட்ட நேரமோ, இல்லை அந்தப் பொண்ணைத் தொட்ட நேரமோ நான் கைவைச்ச விஷயம் லாபமாயிடுச்சு. எங்கியோ கோடிக்கணக்கில போயிடுச்சு. ரெண்டரை கோடி காசா, கரன்ஸியா சூட்கேஸ்ல கொண்டு வந்து வீட்டில வைக்கிறான். இங்க இருக்கட்டும், விக்கிறதைப் பத்தி யோசனை பண்ணிச் சொல்லுன்றான்." கதிரேசன் பின்சீட்டில் சரிந்து உட்கார்ந்து கொண்டு தொடர்ந்து பேசினான்.

"காப்பி ஏறின வேகத்தில் இறங்கும். இன்னும் ஒரு படி விலை ஏறட்டும் என்று காத்துக் கொண்டிருக்கிறேன். இந்த இடத்தில் வாழ விரும்பாத வட இந்தியனுக்கு விற்று விட விரும்புகிறேன். அந்த லாபத்தை ஏலத்தில் போட விரும்புகிறேன். நாராயணா, நானாகப் போய் இனி எதுவும் பேச முடியாது. என்னை அதீத பணக்காரன் என்பதாய் எல்லோரும் பார்க்கிறார்கள். நான் போய் ஏலக்காய் எஸ்டேட் விலை கேட்டால் இரட்டை விலை சொல்லுவார்கள். நீ விலை கேள். எனக்காகக் கேள். என்னுடைய பினாமியாக இரு."

"கடைசி வரை பினாமிதானா, நானாய் நின்னு நிக்க முடியாதா. எனக்கு என்று எதுவும் கிடையாதா?"



ஓட்டல் முதலாளி, ஜோக் எழுத்தாளரிடம்:-

"சொன்னா கேளுங்க சார். எங்க ஓட்டல் பேப்பர் ரோஸ்ட்லேயெல்லாம் உங்க ஜோக்கைப் பிரசுரிக்க முடியாது. ஏதாவது ஒரு பத்திரிகைக்கு அனுப்புங்க, ப்ளீஸ்"

- டி.எஸ்.பாலகிருஷ்ணன்

"எனக்குப் புரிகிறது. இப்படிச் செய்யலாம். உன் பெயரில் பத்து ஏக்கர் வாங்குகிறேன். இன்னொரு பெயரில் இருபது ஏக்கர் வாங்குகிறேன். இன்னொரு பெயரில் முப்பது ஏக்கர் வாங்குகிறேன். தற்போது இருக்கிற தோட்டத்தைச் சேர்த்து, வாங்குகிற தோட்டத்துக்கும் நீயே மேஸ்திரி. இப்போது வாங்குகிற ரெண்டாயிரம்தான் எப்போதும் சம்பளம். ஆனால் பத்து வருடம் பொறுத்து அந்த பத்து ஏக்கரும் உனக்கே சொந்தமாகும். அதாவது உன் பெயரில் வாங்கப்பட்ட பத்திரம் உனக்குக் கொடுக்கப்படும். அதுவரை என்னிடம் இருக்கும். கிட்டத்தட்ட ஒரு ஏக்கர் நாப்பதாயிரம் விலையுள்ள ஏலக்காய்த் தோட்டம். அதாவது நான் உனக்கு மூவாயிரத்து முந்நூறு அளவு தனியே சம்பளம் தருகிறேன் என்று இதற்கு அர்த்தம்." கதிரேசன் கணக்குப் போட்டுக் காண்பித்தான். நாராயணனுக்கு மனம் நிறைந்தது.

"ஜாதியின்னா ஜாதி– காதலுக்கு மொழி மதம் எதாவது தடையா. ஒரு தமிழ்ப் பையன் மலையாளத்துப் பொண்ணை கல்யாணம் பண்ணிக்கிட்டான். இப்போ நாங்க பேசற மலையாளத்தை விட நல்ல மலையாளம் பேசறான். எழுதப் படிக்க கத்துக்கிட்டு தகழின்றான், வள்ளத்தோல்ன்றான். யூனியன் ஆளுங்களுக்கு மலையாளத்துல கவிதை எழுதித் தரான். எங்க மனசு வைக்கிறமோ அங்க கலந்துடணும். அது மலையா இருந்தாலும் சரி, பொண்ணா இருந்தாலும் சரி. உங்களுக்கு மலை புடிச்சிப் போச்சு. பொண்ணு புடிச்சு போச்சு. ஊனி நில்லுங்க. நான் கூட இருக்கேன்."

"ரெண்டு பேர் அதுக்குத் தொந்தரவு பண்ணுவாங்க."

"யாரு?"

"லட்சுமண செட்டியார், விநாயகம்."

"எங்கிட்ட வுடுங்க. நான் பாத்துக்கிறேன்."

"விநாயகத்தை வேலையிலிருந்து எடுத்துடட்டுமா?"

"யூனியன் பிரச்னை வரும். நேதாக்கமார் தொந்தரவு பண்ணுவாங்க."

"சரிக்கட்ட முடியாதா?"

"சரிக்கட்ட முடியாதது எதுவும் உலகத்தில் இல்லை. எல்லாம் காசுதான்."

"விநாயகம் வந்தா வெளியே தூரத்திடு. என்னை க்யூரிங் ரூம்ல வைச்சு கதவு சாத்தினான். அவனை எதுனா பண்ணியாவணும்."

"செய்துடலாம்."

அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து, சிரித்துக் கொண்[redacted]ர்கள்.

(தொடரும்)

# ஏனோ ஏற்றுக் கொள்வதற்கு கடினமாக இருக்கிறது.

**36%**

## அனுபவ் கணக்கு

தனது முக்கிய தொழிலாய் விளங்கும் கட்டிடத் தொழிலின் நிதி நிர்வாகத்தைப் பொறுத்த வரையில், அனுபவ் இரண்டு வழிகளை மேற்கொள்ளலாம். வங்கிகளிடமிருந்து வருடத்திற்கு 18% வட்டிக்கு கடன் வாங்கும் பட்சத்தில், அதற்கான செக்யூரிட்டிகளுக்கு ஏற்கெனவே வருடத்திற்கு 18% வட்டி தரவேண்டிய நிலைமை இருக்க, மொத்த வட்டி சதவிகிதம் மூச்சுத்திணறவைக்கும் 36%. இதை விடுத்து, வருடத்திற்கு 24% வட்டி என்ற கணக்கில் பொது மக்களிடமிருந்து டெபாஸிட்டுகளை ஏற்றுக் கொள்ளலாமே! பொதுமக்களுக்கும் சரி, எங்களுக்கும் சரி 24% என்பது கவர்ச்சியான வட்டிதானே.

## அனுபவ் அனுபவம்

கட்டிடம் மற்றும் வேளாண்மை சார்ந்த தொழில்களில் வெற்றிகரமாகச் செயலாற்றி அனுபவ் பொதுமக்களின் ஆதரவையும் நம்பிக்கையும் பெற்றுள்ளது. இதன் காரணமாக, அனுபவ் டெபாஸிட் திட்டங்கள் எப்போதும் மக்களின் வரவேற்பை உடனடியாகப் பெற்று வெற்றியடைந்து வந்துள்ளன.

*அசைக்க முடியாத நம்பிக்கை. செயல்வழி விளைந்த நம்பிக்கை. சீரிய நிர்வாகத் திறனால் கட்டிக் காக்கப்பட்டுவரும் நம்பிக்கை. அதுதான் அனுபவ் வெற்றியின் உண்மை.*

### அனுபவ் டெபாஸிட் ஸ்கீம்

| குறைந்தபட்ச முதலீடு | வட்டி விகிதம் | |
|---|---|---|
| ரூ. 10,000/- | 24% | 12 மாதங்களுக்கான வட்டி மாதாந்திர பின் தேதியிட்ட செக்குகள் மூலம் முன்னதாகவே தரப்படும். |

### அனுபவ் பாண்ட்

| குறைந்தபட்ச முதலீடு | காலம் | முதிர்ச்சி கால ஈட்டுத்தொகை |
|---|---|---|
| ரூ. 25,000/- | 3 1/2 ஆண்டுகள் | ரூ. 50,000/- (உங்கள் முதலீடு 3 1/2 வருடங்களில் இரட்டிப்பாகிறது) |



**அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

அனுபவ் சென்டர், 11, சோமசுந்தரம் தெரு, திநகர், சென்னை-600 017.
ஃபோன்: 8254155/8282629/8282833/8283316 ஃபாக்ஸ்:8284967

*கிளைகள்:* அடையார், (போன்: 4916619) • தாம்பரம், (போன்: 2366658) • விருதுநகர். • பாண்டிச்சேரி, (போன்: 43086) • சேலம், (போன்: 446981) • திருச்சி, (போன்: 463091) • மதுரை, (போன்: 33214) • கோயம்புத்தூர். • திருநெல்வேலி, (போன்: 337960) • நாகர்கோவில். • ஹைதராபாத், (போன்: 394735/394741) • விசாகப்பட்டினம், (போன்: 60160) • வாரங்கல் (போன்: 73719) • விஜயவாடா, (போன்: 74646) • பெங்களூர், (போன்: 5591483) • மைசூர், (போன்: 31981/26965) • கொச்சின், (போன்: 372118/374156) • திருவனந்தபுரம், (போன்: 75117) • கோழிக்கோடு, (போன்: 58912) • பம்பாய், (போன்: 4309554/4379467) • புதுடெல்லி, (போன்: 6434084/6434085)

**திறமையுடன் செயலாற்றுகின்றோம். அதிக வட்டி தருகிறோம்.**

ADWAVE/AFI/5093 TAM B




**கை**யில் கனியாக பிரபுதேவாவின் கால்ஷீட். காதை வருடும்படியாக இளைய ராஜாவிடமிருந்து இரண்டு பாடல்கள்.

இந்த இரண்டையும் வைத்துக் கொண்டு என்ன செய்யலாம் என்று யோசிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். உருப்படியாக ஒன்றும் தோன்றாததால், கல்யாண மோர்க்குழம்பு மாதிரி ஒரு கதை பண்ணி, தம்கட்டி இரண்டரை மணி நேரத்திற்கு இழுத்திருக்கிறார்கள்.

இருபத்தோராம் நூற்றாண்டு அடுத்த தெருவில் காத்துக் கொண்டிருக்க, இன்னும் புராதன ஜமீந்தார், வளர்ப்பு மகன் (இது மட்டும் இன்னும் புதுசு!) கொள்ளையர் கிராமம், என்று நைன்டீன் ஃபாட்டீஸை விட்டு நகருவேனா என்று கேட்கிறார் அன்னக்கிளி செல்வராஜ்.

அநாவசியத்துக்கு ஒரு அம்மா சென்டிமென்ட். தம்மாத்தூண்டு ரோலுக்கு ராதிகா? அக்கிரமம்!

அடுத்த அக்கிரமம், நம்பியார் போன்ற உன்னதக் கலைஞர்களையெல்லாம் க்ரூப்பில் ஒன்று போல் காட்டியிருப்பது.

திரை முழுக்க பிரபு தேவா என்று ஆசைப்படுவது சரிதான். அன்னாருக்கு ஆட்டத்தைத் தவிர வேறெதுவும் வராத பட்சத்தில், அகன்ற திரையும் அட்டகாச கேமராவும் அழகூட்டும் கலைநுணுக்கங்களும் தனித்தனியே த்ரீ-டி படம் மாதிரி தூக்கிக் கொண்டு தெரிகின்றன. ஒன்றாவது ஒட்டுமாக்கும் என்று பார்த்தால் ஹூம்! – ரோஜாவின் பனிச் புன்னகை ஒன்று தவிர!

அவரும், ஆரம்பித்து ஒரு மணி நேரம் வரைக்கும் காதலுக்கு முன் கட்டாய மோதல் இலக்கணப்படி, சென்னாவைக் கண்ட அம்மா கணக்கில் முறைக்க, சூடு தாங்கலை நைனா!

சென்டிமெண்ட், வீரம், ஆடல் பாடல், நகைச்சுவை, இன்ன பிற மசாலா அம்சங்கள் அனைத்தும் இருக்கின்றன. அதது, தனித்தனி ரூட்டில்!

சேர்த்துத் தொடுப்பதில், திரைக்கதை எழுதியவர் கோட்டை விட்டிருக்கிறார். அதனால், இடைவேளைக்குப் பிறகு மூன்று நாற்காலிக்கு ஒரு ஆளாய் ஹாயாக உட்கார்ந்து பார்க்க முடிகிறது.

**- ஆர்.பி.ஆர்.**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

## (ஸ்ரீ மகாலக்ஷ்மி ஸ்தோத்திர தமிழாக்கம்)

● தாமரை திகழும் திருக்கரமும்
தளிர்நகை பொழியும் ஒளிமுகமும்
க்ஷேமம் அளிக்கும் நல்லருளும்
சேவிப் பார்க்கு நிறைவரமும்
மூவர் போற்றும் பெருமையுடன்
முன்னே சங்க பதும நிதி
காவல் செய்ய, காட்சிதரும்
கமல மாதே! வணங்கு கிறேன்!

● தாமரை வடிவாய்த் திருக்கண்கள்!
தாமரை மென்மை தளிர்க்கைகள்!
தூய மங்கல வெண்மை உடை!
துலங்கு சந்தனம்! மணிமாலை!
ஞானம், சக்தி, பலம், செல்வம்
நயத்தகு வீரம், பொலி வென்னும்

ஆறும் பெற்று மூவுலகும்
ஆட்சி புரிபவளே! அருள்க!

● இயற்கை, செயற்கை இயற்றுவிப்பாய்!
எல்லா உயிர்க்கும் நலஞ்செய்வாய்!
அனைத்துக் கலைக்கும் அடிப்படையாய்
அரிய செல்வத் திருப்பிடமாய்
நினைத்த தளிக்கும் சுரபியென
நிலவும் மேலாம் வடிவம் நீ!
விளங்கும் தெய்வ இலக்குமியே!
விஷ்ணுவின் இதய இலச்சினையே!

● செந்தாமரை தான் உன் வீடு!
திகழும் தூய்மை உன் ஏடு!
அமுதம் தோற்க இனிப்பவள்நீ!
அனைத்திலும் அணுவாய் அமைந்தவள் நீ!
அக்கினி பத்தினி ஸ்வாஹா நீ!
அரிய ஸ்வதாவும் ஆனவள் நீ!

எங்கும் எதிலும் எந்நாளும்
இலங்கிச் சிறப்பவளே சரணம்!

● அரிய வடிவம் நற் குணமும்
அற்புதப் புகழும் பெற்றவளே!
அசுர மாதா திதியைத்தன்
அதிகா ரத்தில் கொண்டவளே!
அகிலம் முழுதும் உன்னொளிதான்
அடர்ந்து படர்ந்து தொடர்கிறது!
அழகே! பொறுமை பூண்டவளே!
அமுதப் பாற்கடல் ஈன்றவளே!

● அறிவே உருவம் ஆனவள் நீ!
அருளைப் பொழியும் வானவள் நீ!!
சிறிதும் குற்றம் அற்றவள் நீ!
ஸ்ரீநா ராயணன் சிந்தை நீ!
உலகின் துயர இருள் நீக்கும்

ஒளியே! பகவான் உட்கொள்ளும்
அமுதே! உன்றன் கடைக்கண்ணால்
அடியேன் இடுக்கண் போக்கிடுக!

- தருமம் அனைத்தும் ஒன்றான
தாயே! உன்னைப் போற்றுகிறேன்!
இருப்பிடம் உனக்குப் பங்கயம்தான்!
இருப்பதும் கையில் கமலம்தான்!
இருவிழி அதுவும் தாமரைதான்!
இலங்கும் அழகும் அம்மலர்தான்!
கருணை வடிவே! காசினியைக்
காக்கும் தாயே! வணங்குகிறேன்!

- மலரில் தோன்றிய மலர்முகமே!
மகிழ்வாய் முகுந்தன் அரவணைக்கும்
அலைமகளே! இவ் வகிலத்தில்
ஆனந்தத்தின் அடிப்படை நீ!

பூவிற் சிறந்த கமலத்தில்
பொலியும் மாலை அணிந்தபடி
பூவையர் விரும்பக் காட்சிதரும்
தேவதையே! உனைத் துதிக்கின்றேன்

● வந்திப் பவர்க்கு வாழ்வளிக்கும்
வாசம் நிறைந்த வரலக்ஷ்மி!
சந்திப் பவர்க்கு மகிழ்வுதர
தருணம் பார்த்தே இருப்பவளே!
சந்திர னோடு நீ பிறந்தாய்!
சந்திர வதனம் நீ பெற்றாய்!
செங்கதி ரோடு ஒளி போன்றே
திருமா லோடு திகழ்பவள் நீ!

● புயங்கள் நான்கு கொண்டவளே!
புதிய நிலாவின் வடிவினளே!
பயன்படு செல்வம் தருபவளே!
பக்தர்க் கருளைப் பொழிபவளே!

நயந்த அன்பர் வாழ்வினிலே
நல்லின் பத்தைத் தருபவளே!
வியக்கும் மங்கல வடிவம் நீ!
வித்தகியே! உனைப் பணிகின்றேன்!

- தூயவளே! நீ உலகன்னை!
துலங்கு சக்தியின் முதற் பண்ணை'
மாயச் செய் என் வறுமையினை!
மலர்ப் பொய்கையிலே வாழ்பவளே!
ஆய்ந்த வெண்மணி ஆடையுடன்
அமைதி துலங்க விளங்குகிறாய்!
தோய்ந்த அன்பில் துதிப்போர்க்குச்
சுடரும் பொன்முடி சூட்டுகிறாய்!

- விளங்கும் வெளிச்ச உருவோடு
வில்வக் காட்டில் விளையாடி
இலங்கும் திருமால் மார்பினிலே
இடமும் பெற்ற இலக்குமியே!

நலமார் செல்வக் களஞ்சியமே!
நல்ல வாழ்வின் இலக்கியமே!
கலங்கும் பாவ வினை போக்கி
கனக மழையைப் பெய்விப்பாய்!

- அன்னை வடிவே! உன்னாலே
அரிய தனமும் தானியமும்
நன்மை பலவும் வருகிறது!
நங்கையர்க்குள்ளே சிறந்தவளே!
பொன்னின் அரண்மனைப் பொலிவினிலே
புண்ணிய வடிவாய் நிறைந்தவளே!
தன்னை பூஜை செய்வோர்க்கு
சகல வரம்தரும் சந்நிதி நீ!

- திருப்பாற் கடலில் உதித்தவளே!
திருமால் மார்பிடை பதித்தவளே!
விருப்போ டணுகும் பக்தர்க்கே

வெற்றியை வாழ்வில் தருபவளே!
செறித்த கனகச் சூழலுடன்
சுடரும் மகிழ்ச்சி மண்டபத்தில்
பொருத்த முடனே பொலிகின்ற
பூவே! உன்னைப் போற்றுகிறேன்!

● தேசம் போற்றும் உத்தமியே!
ஸ்ரீமகா விஷ்ணுவின் பத்தினியே!
பூசை மலராய்ப் பொலிகண்கள்!
பொன்னைப் பொழியும் திருக் கைகள்!
மோசம் செய்யும் வறுமையினை
முற்றும் அழிக்கும் அருட் பார்வை!
ஆசை யாவும் நிறைவேற்றும்
அன்னை உன்னைப் புவிபோற்றும்!

● நவ துர்க்கைக்கும் மூலமென
நாயகியே நீ விளங்குகிறாய்!

சிவன் அயன் திருமால் மூவருமே
சேர்ந்த சங்கம வடிவம் நீ!
அவரவர் தொழிற்கும் நீ மூலம்!
அன்னை நீயே முக்காலம்!
அவனி சுழன்றிட காரணமே!
அனைத்தும் நிறைந்த பூரணமே!

● தேவ மாதர் பணி செய்ய
திகழும் தலைவி! வையத்தின்
மேவும் சுடர்நீ! மேன்மை நீ!
மேலாம் பாற்கடல் உதித்தவள் நீ!
மூவர் போற்றும் முதல்வி நீ!
மூவுல குக்கும் இறைவி நீ!
ஆவ தனைத்தும் உன்னாலே!
ஆசி அளிப்பாய் கண்ணாலே!

● நாரா யணரின் நெஞ்சமெனும்
நற்றா மரைப்பூ நடுவினிலே

சீராய் அமர்ந்த ஸ்ரீமகளே!
திசைகள் எட்டும் உன் புகழே!
ஆரா திப்பார் இல்லத்தை
அரண்மனை ஆக்கும் பெற்றியளே!
பூரணக் கருணை பொழிந்திடுவாய்!
பொன்மகளே! உன் அடி சரணம்!

● தினமும் காலை மாலையிலே
திருவார் இலக்குமி தோத்திரத்தை
மனனப் படுத்தி மலரிட்டு
மங்கல தீப தூபமுடன்
விநயத் தோடு துதித்து வர
வெளிச்சம் வாழ்வில் நிலையாகும்!
கனகம் நிறைந்தே இவ்வுலகின்
காவல ராகிச் செழித்திடலாம்!

தமிழாக்கம் : **மதிவண்ணன்**

ஓவியங்கள் : **லலிதா**

உனக்கு மன அமைதி வேண்டுமானால், பிறரிடத்துக் குற்றம் காணாதே. அதற்குப் பதிலாக, உன் குற்றங்களையே எண்ணிப்பார். இவ்வுலகம் முழுவதையும் உன்னுடையதாக்கிக் கொள்ளப் பழகு. குழந்தாய்! இவ்வுலகில் யாரும் உனக்கு அன்னியரல்ல. இவ்வுலகம் முழுதும் உனதே. ஒருவன் பிறரிடத்துக்குக் குற்றம் காணப் புகுவானேயாகில், அவனது மனமே முதலில் மாசடைகின்றது.

**— அன்னை ஸ்ரீ சாரதா தேவி**

என் சிநேகிதியிடம்

சொன்னேன்,

"போதும், உன்

பணம் வீணாவதை

நிறுத்து" என்று

விலை குறைவாக தோன்றும் பேண்ட்டிகளை வாங்கிடும் விருப்பம், புரிந்துகொள்ளக் கூடியதே. ஆனால், பின்பு தெரியவரும் அதன் கஷ்டங்கள்: உடலை உறுத்திப் பிடிக்கும் எலாஸ்டிக்.



சாயம் போகுதல். துணி தளர்ந்து தொங்கிப் போகுதல். இதில் கவனிக்க வேண்டியது, நீங்கள் இந்த அவதிகளுக்கு உட்படவே வேண்டாம்.

காரணம்: "யூ" எனும் ஒரு பேண்ட்டி இப்போது கிடைக்கிறதே! மகளிருக்கான இளம் கலர்கள். இறக்குமதி செய்யப்பட்ட "[illegible]" ரப்பர் எலாஸ்டிக். மிருதுவான, 100% தூய்மையான உயர்தர பருத்தியிலிருந்து தயாரிப்பு. உங்கள் உடல்வாகுடன் அணைந்து கொடுத்திடும் தன்மை. அதற்கேற்றபடி நீண்-டு-வ-ளை-ந்-து கொடுக்கும் எலாஸ்டிக் மற்றும் துணி. ஆனாலும் துவைத்தல் பலமுறைகளுக்கு பின்பும் தளர்ந்து போகாது. மொத்தத்தில், பேண்ட்டிகளுக்கு ஆகும் செலவு உண்மையில் குறைவு.

"யூ" இருக்கையில் வேறெந்த, மட்டமான பேண்ட்டிகளை வாங்கி காசு ஏன் வீணாக்க வேண்டும்!

**you®**

100% பருத்தித்துணி பேண்ட்டிகள்

உடலுக்கு நல்ல சுகம்.
பணத்திற்கு நல்ல பலன்.

ஒரு tk தயாரிப்பு

Distributors in the Middle East : * GULF IND International Co., P.O. Box. 14730, Doha, Qatar. Ph : 974-417606, 428944. Fax : 974-442199, 328770. * AL-BARAHA For Readymade Garments and shoes Est., P.O. Box. 23967, Safat, Kuwait.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

சில விமானங்கள் நாடுகளைக் கடந்து பறக்கின்றன; வேறு சிலவோ கண்டங்களைக் கடந்து செல்கின்றன. நாங்கள் காலத்தையே கடந்து சென்று நூற்றாண்டுகளை இணைக்கிறோம் : ஆக்ராவில் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த தாஜ்மகால், கஜுராஹோவின் பதினோராம் நூற்றாண்டுச் சிற்பங்கள், வாரணாசியிலோ காலநிலை கடந்த புனித கங்கை நதி.

மதுரையில் புராதனக் கோயில்களின் பிரமிப்பூட்டும் கட்டுமானம், அஜந்தா, எல்லோராவில் அற்புதமான குகையோவியங்கள்...

நூற்றாண்டுகளைக் கடந்து செல்கையிலேயே இன்றைய இந்தியாவின் உயிர்த் துடிப்பையும் உங்களுக்கு உணர்த்துகிறோம்.

வாருங்கள், பல நூற்றாண்டுகளின் கலாசாரமும் நாகரிகமும் பிணைந்த பரப்புகளைக் கடந்து பறக்கலாம்!



# INDIA

## Fly across centuries

### Much more for less

A network of 68 destinations (54 domestic and 14 international) linked with an all jet fleet of Airbus A320s, A300s and the Boeing 737s.

You can choose from a host of low fare packages that take in a lot more than you ever imagined.

### Discover India

21 days unlimited economy class air travel anywhere in India. Only US$ 400.

### India Wonderfares

7 days unlimited economy class travel within North, South, East or West India. Only US$ 200.

With additional US$ 100 Port Blair can be included in the itinerary for the Eastern and Southern schemes.

### Youth Fare

25% discount on US$ tariff for those between 12 and 30 years of age. Applicable all the year round.

### South India Excursion

30% discount on US$ tariff for travel on specified South India sectors.

### SAARC Group Excursion Fare

30% off for groups of 10 or more adults and 20% off for individual travellers touching a minimum of three countries — Bangladesh, India, Maldives, Nepal, Pakistan and Srilanka. Minimum stay at least two days in each country and at least 7 days for the itinerary. Maximum stay 21 days.

### Common Interest Group

10% off for groups of 10 or more adults travelling together for a common interest on all international services as well as connecting domestic services.

**25% seats are reserved for foreign tourists up to 72 hours prior to departure of flight for tickets issued in dollar fares. No cancellation charges.**

**For Reservations/Information contact:**
Indian Airlines, Main Booking Office
19, Rukmani Lakshmipathy Road
Madras 600008
Tel: 8555200/8555201 & 8555202 (Group Booking)

इंडियन एयरलाइन्स
Indian Airlines

Now with our new Real time Reservation link-ups with travel agents, you can book a seat instantly on our network from any part of the world